முதற்பதிப்பு 1970

# அண்ணாவுக்குக் காணிக்கை

எங்கேநீ இருக்கின்றாய், என்பாட்டின் முதற்சுவைஞா?
அங்கே நான் வருகின்றேன், அடியேனின் கவிதையுடன்!
இங்கேநின் தம்பியெனை ஏற்றுகின்றார் எனவே நான்
சங்கேபோற் சிறுநூலைத் தாள்களிலே படைக்கின்றேன்!

ஓவியம் : செல்லப்பன்
அமுதோன்

மனோரமா அச்சகம், சென்னை-14.

# என்னுரை

"பூக்காடு" என்ற கவிதைத் தொகுப்பினை அடுத்துக் "கனியமுது" என்னும் இந்தப் புதிய படைப்பினைத் தொகுத்துள்ளேன். அதற்குக் கிடைத்த ஆதரவும் பாராட்டும் இதற்கும் கிடைக்கும் என்றே நம்புகிறேன்.

வழக்கமாக நான் எழுதிவரும் கதைபொதி செய்யுள் அமைப்புகளே இதிலும் இடம் பெற்றுள்ளன. எனினும் யாவுமே எண்சீர் விருத்தமாக இல்லாமல் அறுசீர் விருத்தங்களும் வெண்டளைப் பாட்டுகளும் சிற்சில விரவியுள்ளன.

என் கவிதைகளைச் சுவைத்து மகிழ்வோருள் அண்ணா இன்று இல்லை. அவரிடத்தையும் நிறைவு செய்து வரும் கலைஞர் — அவர் தானே என் உயிர்— இதற்கு அணிந்துரை நல்கியுள்ளார். எந்த நேரத்தில் அதனை எழுதித் தந்தார் என்பதொன்றே என்பால் அவர்க்குள்ள அன்பின் ஆழத்தை எடுத்துக் காட்டும்.

சொற்களால் அவருக்கு நான் நன்றி கூறிடல் இயலுமா?

தலைப்பு ஓவியங்கள் தீட்டித் தந்த என் நண்பர் செல்லப்பன், மேலட்டையினை அலங்கரித்த அன்பர் அமுதோன், அச்சியற்றி உதவிய மனோரமா அச்சகத்து உரிமையாளராம் என் சோதரர்கள் அனைவருமே நன்றிக்குரியர்.

படித்துப் பாராட்ட வேண்டுகின்றேன்.

வணக்கம்.

ஆனந்தம்

1—7—'70

கனியமுது



# அகம்

ஆனந்தம் கவிதைகள்

## உள்ளே!

பின்பனி.

குருடர்கள்.

காதல்நோய்.

சாதகப்பொருத்தம்.

செங்குருதித்திருமணம்.

சூழ்நிலை தேவையா?

எதிர்வீட்டுக்காரி.

இளங்கிளி.

பெண் பார்த்தான்.

கண்ணன் என் நண்பன்.




கத்துகின்ற அலைபுரளும் கடல்க டந்தும்
        கணக்கற்ற பொருள்தேடல் கடமை என்று,
முத்தப்பன் இளமையிலே மலாயா சென்றான்.
        மூன்றாண்டு முதுகொடியப் பாடு பட்டுச்
சொத்துகளை ஓரளவு சேர்த்துக் கொண்டு,
        சொந்தவூர் திரும்பி வந்தான் தாயைக் காண!
பித்துடைய பெற்றமனம் மூப்பை எண்ணிப்
        பிள்ளைக்கோர் பெண்பார்த்து மணம்மு டித்தாள்.

கரிய நிறம் ஆனாலும் கவர்ச்சிப் பாவை,
        கண்முதலாம் ஐம்புலனும் நுகர்தற் கேற்றாள்.
புரியவில்லை இருதிங்கள் போன மாயம்!
        புதுமணத்துப் பின்விளைவும் உருவ மாகப்
பிரியவொரு பிரியமில்லை; எனினும், ஆங்கே
        பெற்றுவந்த அனுமதிநாள் தீர்ந்த தாலே,
அரியதிருத் தாயார்க்குத் துணையாய் விட்டே
        அயல்நாடு புறப்பட்டான்; கயற்கண் ஏங்க!

அடுத்துவந்த மழைக்காலம் கொடிதாம், அந்தோ!
ஆங்காரப் புயற்காற்றின் சீற்றம் வேறு!
கெடுத்ததவர் குடியை, அந்தக் கிழவி மாண்டாள்!
கீழ்வீழ்ந்த சுவர்க்கிடையே மகன் பிறந்தான்!
அடுத்தவீட்டுக் கந்தப்பன் உதவா விட்டால்,
அவள் நிலைதான் பாழாகும்! கணவ னுக்கு
விடுத்திட்ட மடல்களுக்கும் பதிலே யில்லை!
விம்மி விம்மி வறுமையினால் உடைமை விற்றாள்!

கடல்கடந்தோன் மனைவிமகன் தாய்ம றந்து,
கண்மூக்குச் சிறுத்திட்ட சீனக் காரி
இடம் மயங்கிக் கிடந்திட்டான்! எதுசெய் தாலும்
யார் கேட்பார்? ஆண்மகனின் உரிமை யன்றோ?
உடல்முழுதும் போர்வைக்குள் மறைத்த வாறே
உறங்குவதை விரும்புகின்ற பனிவீழ் காலம்—
உடல்நலிவால் இடருற்ற நீலா வுக்கே
ஓடோடிக் கந்தப்பன் துணைபு ரிந்தான்!

அயல்நாட்டில் வாழ்வோர்க்குத் தாய்நாட் டில்ஏன்
அழகான ஒருமனைவி? தனியே வாடி,
அயல்வீட்டுக் காளையரின் தொல்லை ஏற்றே,
அங்கங்கள் குறும்பாலே தவறி ழைக்கும்
செயல்மாற்ற வகையற்றுத் தினறும் போக்கைச்
சிந்திக்க முத்தப்பன் முற்பட் டானோ?
பயல்மட்டும் தன்இன்பம் பார்த்துக் கொண்டான்!
பாவையவள்ஏழ்மையினால் பெண்மை கெட்டாள்!

கந்தப்பன் ஊர்வாயை மூடு தற்குக்,
கைக்குழந்தைக் காரியைத்தன் துணைவி என்று
சொந்தமுடன் உறவாடி, வேற்றூர் தன்னில்
சோற்றுக்கும் வகைதந்தான்; வாழ்ந்து வந்தார்!
செந்தழலைத் தண்பனியாய்க் கருதிக் கொண்ட
திறனிழந்த முத்தப்பன், சினைக் காரி
வந்தவழி மறைந்திடவே, மயக்கந் தீர்ந்து,
மதிதெளிந்து, தாயகத்தை நினைவு கூர்ந்தான்!

வேர்விட்ட மரம்போல வீட்டி னுள்ளே
விளைபுரிவாள் மனைவியெனத் தேடிப் பார்த்தான்!
ஊர்மட்டும் இருந்ததவன் வீடங் கில்லை!
உசாவியதில், இருப்பிடத்தை யாரோ சொன்னார்...
"சீர்கெட்டாள் வாழ்வதற்கு விடவோ?" என்று,
சீறிஎழுங் கடலலைபோல் பாய்ந்து சென்றான்!
"யார்? எட்டிப் போம் உடனே!" என்ற நீலா;
"ஏதுமக்கே என்மீதில் உரிமை?" என்றாள்!

"முன்பொருநாள் தாலிகட்டிச் சென்றீர்! அன்று
முதியவளின் மரணத்தால் தனித்தேன்! நீரோ...
முன்பனியாய் மூடுபனி போல நின்றீர்;
முறைகெடவுங் காரணமாய் ஆனீர்! ஆனால்,
பின்பனியாய்த் தண்பனியாய் வந்தே, எம்மைப்
பேணிவரக் கந்தப்பன் இலாதிருந்தால்...
என்பொழுது விடிந்திடுமோ?" என்று கூறி,
இரட்டைத்தாழ் இட்டுவிட்டாள் நீலா! தப்பா?




படர்கின்ற முல்லைக்குக் கொழுகொம் பாகப்
பாரிவள்ளல் தேரீந்து புகழ்பெற் றாற்போல்—
தொடர்வண்டிச் சந்திப்பில் ஆட்சி செய்யும்
துரைசாமிக் குருடனுக்கோர் செங்கோல் தந்து,
இடறிவிழா வண்ணமவன் நடந்து, பிச்சை
எடுப்பதற்கு வகைசெய்த வள்ளல் யாரோ?
அடர்துன்பச் சிந்தனைகள் அணுவு மின்றி,
அன்றாடத் தேவைபெற்று, நிறைவாய் வாழ்ந்தான்.

பண்பாடித் திரட்டிவந்த நாண யத்தைப்
பழங்கந்தை முனையினிலே முடிச்சுப் போட
எண்ணியவன், இருந்தவற்றை எண்ணும் போதில்,
"எனக்குமொரு பங்குதரு வாயா?" என்று,
தண்ணென்ற கரத்தாலே தோளைத் தொட்டாள்,
தங்கம்எனும் காலற்ற பிச்சைக் காரி!
கண்மூடி இருந்ததனால், காதல் ஊறும்
கருத்தையுமா மூடிவிட்டான்! இயலா தன்றோ?

மேளமில்லை; தாலியில்லை; சாட்சி யில்லை;

விருந்துமட்டும் அருந்திவிட்டு மணம்மு டித்தார்;

தாளமில்லாச் சங்கீதம் சுவைக்கா தன்றோ?

தவழ்கின்ற மழலையின்றிக் குடும்பம் ஏது?

நாளைமட்டும் எண்ணிவந்தால் போதும்; மாதம்

நாலைந்து முடிவதற்குள், இரண்டு தங்கப்

பாளமெனப் பெண்ணொன்றும், ஆணாய் ஒன்றும்

படைத்திட்டார்! ஆணுக்கோ கண்கள் இல்லை!!

இரந்துண்ணுங் குலத்தொழிலைக் காப்ப தற்கே

இருபிள்ளை பெற்றுவிட்ட பிச்சைக் காரி

இறந்திட்டாள்! அவளைப்பின் பற்றித் தந்தை

இறக்குமுன்பு, பெரியவளாம் மகளி டத்தில்,

"மறந்திடாதே. தம்பியை; உன் உயிர்போல் எண்ணி

வளர்த்திடுவாய்! எதுவரினும் அவனை விட்டுப்

பிரிந்திடாதே!" என்றுரைத்தே மாண்டு போனான்!

பேதையவள் தலையசைத்தே உறுதி தந்தாள்!

செழுமையுடன் வளர்கின்ற குப்பை மேட்டுச்

செடியைப்போல், ஏழ்மையிலும் சிறுமை யின்றி,

முழுமையுடன் எழில்பெற்ருள்! பார்ப்போர் நெஞ்சில்

மூண்டெழுந்த உணர்வெதையும் மதித்தி டாது

விழும்பிச்சைக் காசுக்குக் கையை ஏந்தி,

விடாமற்பின் தொடர்கின்ற தம்பியோடு,

தொழும் வாழ்வில், புகைவண்டி நிலையத் தையே

சுற்றிவந்தாள்; தந்தைசொல் காத்து நின்ருள்!

"குருட்டுத்தம் பிக்காக உனது வாழ்வைக்

குப்பையிலே குன்றிமணி போலாக் காதே!

வெருட்டிவிட்டு வந்துவிடு! மறுத்தால், உன்னை

விடமாட்டோம்; வெஞ்சிறையிலிடுவோ" மென்று

மருட்டியவர் ஏராளம்! எதையுங் கேட்டு

மனமயக்கம் கொள்வதில்லை; தம்பி யின்றி

இருட்டில் அவள் செல்வதில்லை; இளமைக் கால

ஏக்கத்தைச் சிறிதேனும் பெறுவ தில்லை!

எத்தனை தான் பாதுகாப்பா யிருந்தும், ஓர்நாள்

இணைபிரியாத் தம்பியவன் காய்ச்சல் கொள்ளப்,

பத்திரமாய் மேடையிலே படுக்க வைத்துப்,

பசிப்பிணிக்கு மருந்து பெற, வண்டி ஓரம்

சித்திரம்போல் நடக்கையிலே—முதல்வ குப்புச்

சீமானின் விழிவலையில் சிக்கி விட்டாள்!

பத்துருபாய் பணத்தாளைக் காட்டி, மிக்கப்

பக்குவமாய்ப் பேச, ஒரு கணம்அ யர்ந்தாள்!

வண்டி, உடன் புறப்படவும், பெட்டிக் குள்ளே

வகையாகச் சிக்கியவள் நிலையு ணர்ந்தாள்.

கண்டிராத பணத்தாலே கற்பை வாங்கக்

கண்ணிருந்துங் குருடனான சீமான் எண்ணிப்...

பெண்டாள முனைகையிலே; விரலைப் பற்றிப்

பெருங்காயம் உண்டாகக் கடித்து விட்டாள்!

அண்டையூரில் வண்டி நிற்கக், குதித்தி றங்கி,

அருந்தம்பி மகிழ்ந்திடவே ஓடிச் சேர்ந்தாள்!




தொடுகின்ற பொருளெல்லாம் சோற்றுக் கில்லாத்
தொழிலாளிப் பெருமூச்சாய்க் கொதிக்குங் கோடை
சுடுகின்ற பகற்கொடுமை தணிக்க எண்ணித்,
துணைவனுடன் கடற்கரைக்குச்சென்றமர்ந்தேன்.
படுகின்ற துயர்குறையத் தென்றல் தீண்டப் —
பக்கத்தில் சேல்விழியாள் மெய்யுந் தீண்டக் —
கெடுகின்ற இடைவெளியை வாழ்த்திக் கொண்டே
கிறங்குமொரு காதலனின் நிலையைக் காட்டி...

"என்றப்பா உனக்கிந்த நிலைமை?" என்றேன்.
ஏனென்றால் அவன் இன்னும் எடுப்புச் சோறே!
"ஒன்றல்ல, இரண்டல்ல; திருமணத்தால்
ஓயாத தொல்லையப்பா! எனக்கு வேண்டாம்!
இன்றுபோலத் தனியாளாய் என்றும் வாழ்வேன்!
எழுந்திரப்பா, நடந்திடலாம்!" என்றான் நண்பன்.
"நன்றல்ல பெண்ணின்றி வாழ்ந்திருத்தல்;
நான்சொல்வ தவ்வளவே!" எனஎழுந்தேன்.

அங்கொருபெண் நடைபாதை மரத்தின் கீழே
அமர்ந்திருந்தாள்; வயது பதி னெட்டி ருக்கும்.
தங்கநிகர் மேனியெங்கும் தணலால் வெந்த
தழும்புகள் போல் தோன்றிடவே அருகிற் சென்றோம்.
அங்கமெலாங் குறைந்தழுகுந் தொழுநோய், அந்தோ!
ஆடையினுல் போர்த்திடவே முயலு கின்ருள்;
எங்களையுங் கடைக்கண்ணுல் பார்த்துக் கொண்டே
இளநகையும் புரிகின்ருள்! அவளைக் காட்டி—

"இவளுந்தான் பெண்பிறவி! யாருக் காக
இவளிங்கே வாழ்கின்ருள், பயனில் லாமல்?
இவளைப்போய் ஆெருருவன் மனைவி யாக்கி,
இல்வாழ்வு துய்ப்பதற்கா வரப்போ கின்ருன்?
இவளையெலாம் பார்த்துவிட்டுத், திரும ணத்தில்
எவ்வாறு நாட்டமெழும்? நட நீ!" என்ருன்.
"தவறப்பா நீ சொல்லுந் தத்து வந்தான்;
தப்பாமல் இவளுக்கும் ஒருவன் எங்கோ

இருந்திடுவான், காட்டுகின்றேன், வா வா!'' என்றேன்.
இருவருமே மேற்சென்ருேம். சாலை ஓரம்
விரைந்திடுமோர் சாய்க்கடையின் கரையில் குந்தி,
வெற்றிலையில் காய்ந்துவிட்ட சுண்ணும் பின்மேல்
நிறைந்துவிழும் கழிவு நீரை அள்ளி ஊற்றி,
நிம்மதியாய், ஈரமாக்கி வாயி விட்டுக்,
கரைந்திடாமல் மெல்லுகின்ற ஒருவன் கண்டோம்!
கவனியப்பா; இவனேதான்; இவன்பின் செல்வோம்!''

என்றுரைத்தேன். பின்தொடர்ந்தோம்; என்ன விந்தை!
எண்ணியது சரியாக, எதிர்ப்புறத்தில்
சென்றடைந்தான்; வரவேற்ருள் தொழுநோய்க் காரி!
சிரிப்பென்ன, அணைப்பென்ன, சிறிது நேரம்!
"வென்றுவிட்டேன்; வாழ்க்கையெனில் ஆண் பெண் ஒன்றும்
விதிமுறையை உணர்த்திவிட்டேன்!'' எனக்குதித்தேன்!
"நன்று,நன்று! நடக்கினிமேல் கடைச்சாப் பாடு
நடக்காதென் றப்பாவுக் குரைப்பாய்!'' என்றேன்.

# சாதகப் பொருத்தம்



பஞ்சாங்கம் எப்போதும் வலக்கரத்தில்;
பார்வையிலே முதுமையினால் பழுது நேர—
அஞ்சாமல் மேல்நாட்டான் அறிவாற் கண்ட
அழகுமிகும் கண்ணாடி மூக்கின் மீது;
நெஞ்சாரச் சோதிடர்கள் கதையை நம்பி
நிகழ்ச்சிகளை நடத்துவதில் பெருவிருப்பம்;
நஞ்சாக இருந்தாலும் நாள்பார்க்காமல்
நாவினிலே இடமாட்டார் சோமநாதர்!

வீட்டினின்று புறப்படும்முன் இராகு காலம்;
வெளிச்செல்ல வந்தாலோ சகுனம் பார்ப்பார்!
'பாட்டிகளின் காலமுதல் பழக்கமான
பழமைமிகு கொள்கைகளைத் தள்ளேன்,' என்பார்!
காட்டில்போய் வாழ்ந்துகொண்டா இதைச்சொல்கின்றார்?
காகிதமும், வாகனமும், மின்னலோடு
போட்டியிடும் ஒளிவிளக்கும், இவைபோல் மற்ற
புதுமைகளை அனுபவித்து மகிழ்வோர் தாமே!

சிக்கனமாய்க் காலமெல்லாம் சேர்த்து வைத்து
சிறுமுதலுக் கொருமகளே உரிய ளானுள்.
தக்கதொரு சோதிடரைக் கொண்ட வட்குச்
சாதகத்தை விரிவாக எழுதி விட்டார்.
மிக்கவொரு துடிப்புடனே கல்வி கற்று,
மேற்படிப்பும் விழைந்திட்டாள்! ஆனுல் தந்தை,
அக்கணமே தடுத்திட்டார்; சாத கத்தில்
அவ்வளவே போதுமென விதித்த தாலே!

இல்லத்தில் அடைபட்டாள் எனினும், நல்ல
எழிலுருவம், இளம்பருவச் செழுமை மேனி,
வெல்லத்தின் சுவைகமழும் அன்புப் பேச்சு,
விழிக்கடையில் அருள்வழியும் கனிந்த நோக்கு;
சொல்லத்தான் முடிவதில்லை நெஞ்சில் பொங்கும்
சோகத்தைத்! தந்தைசொல் மீற மாட்டாள்!
மெல்லத்தன் உணர்வுகட்குத் தாழ்ப்பா ளிட்டு,
வேளையெதிர் பார்த்திருந்தாள், விடிவு காண

மணப்பருவம் எய்திவிட்ட செய்தி கேட்டு,
வரன்தேடி அலைகின்ற தரகர் கூட்டம்
பணப்பையைக் கரைப்பதற்கு வந்து சேர்ந்தார்!
பாரெங்கும் ஊரூராய்த் திரிந்து சென்று,
குணப்பொருத்தம் குடிப்பொருத்தம் காணு முன்னே
கோள்நிலையும் நாள்நிலையும் குறித்துப் பார்த்துக்,
கணப்பொழுதுந் தவறாமல் கணித்த தென்று,
கடைசியிலே ஒருவரனை முடிவு செய்தார்!

சாதகங்கள் பொருந்தியதால் மற்ற வற்றைச்
சரியாகப் பார்க்கவில்லை சோம நாதர்.
'பாதகமா செய்திடுவார் தரக'ரென்று,
பையனது வெளியழகைக் கண்டு நம்பிச்,
சூதறியா உளத்தினராய்ச் சம்ம தத்தைச்
சொல்லிவிட்டார் நல்லதெனச்; சிறப்பு மிக்க
சாதனையாய்த் திருமணத்தை நடத்தி வைத்துச்,
சகலவித சீர்வரிசை மகிழ்ந்து தந்தார்!

புக்ககத்தில் நுழைந்தவுடன், புகையும் தீக்குள்
புகுந்துவிட்ட நிலைபெற்றாள்! தனக்கு முன்பே
சக்களத்தி எனத்தகுமோர் பெண்ணொருத்தி,
சாகசமும், தந்திரமும், நடிப்பும் தேர்ந்தாள்;
துக்கமின்றிக் காதலன்தான் துணிந்து செய்த
துரோகத்தை இடித்துரைக்கும் வலிமை யோடு,
பக்கபல மாகவொரு குழந்தை கையில்
பரிமளிக்க, உரிமையுடன் விளங்கக் கண்டாள்!

மான்போல மருட்சியுடன் மயங்கி நிற்கும்
மனைவியிடம், கணவனெனும் காத கன்தான்
தேன்போலும் மொழியுரைத்தான்; "திரும ணத்தால்
சேர்ந்திட்ட நீ, எனக்கோ இரண்டாந் தாரம்!
நான்போகும் பாதையிலே குறுக்கி டாதே!
நயந்தெம்மைப் பணிந்திடுவாய்; இன்றேல், தூண்டில்
மீன்போலத் துடித்திடவே நேரும்! வேறு
மீள்வதற்கும் வழியில்லை; புரிந்து வாழ்வாய்!"

ஊற்றுப்போல் நீர்சொரியும் கண்க ளோடும்
உடனேதன் தந்தையின்பால் ஓடி வந்தாள் !
ஆற்ருெண்ணுத் துயர்க்கடலில் ஆழ்ந்தார் தந்தை!
ஆராய்ந்து பண்பறிந்து வரன்தே டாமல்,
காற்றுள்ள நேரத்தில் தூற்றிச் சென்ற
கயவரது புரட்டுகளை உண்மை யென்று
சாற்றுகின்ற சாத்திரத்தால் மோசம் போனுர்;
சாதகத்தைத் தீயிலிட்டுச் சூளு ரைத்தார்!

"என்மகளைத் துச்சமென எண்ணிக் கொண்ட
இழிமகனுக் கொருபாடம் புகட்டு கின்றேன்!
நன்மகனைத் தரவியலாச் சாத்தி ரத்தால்
நடைபெற்ற திருமணத்தை விலக்குச் செய்வேன்
இன்முகமும், பொன்மனமும் பெற்ற வேறோர்
ஏழைக்கு மறுமணமாய் மகளைத் தந்து,
தன்மதிப் பைக் காத்திடுவேன்!" என்ருர். அந்தத்
தையலுமே மனமிசைந்து, வாழ்வு பெற்ருள்!

# செங்குருதித் திருமணம்



ஓய்வுபெற்ற அதிகாரி உலக நாதர்
உணவருந்தி, வெண்சுருட்டுப் புகைத்த வாறு,
சாய்வுநாற் காலியிலே சரிந்தி ருப்பார்.
சரிகையிட்ட காஞ்சிபுரம் பட்டுச் சேலை
தேய்வுபெறு உரல்போன்ற இடையைச் சுற்றத்—
திரளாகத் தொங்கவிட்ட சாவிக் கொத்து
போய்வரவே கிண்கிண் எனும் ஒலியெ ழுப்பப்—
போராடும் பேருடலாள் வேத வல்லி!

மூத்தமகன் தகப்பனைப்போல் மெலிந்த மேனி;
முற்றிவிட்ட இதயநோயால் தாக்கப் பட்டோன்!
பார்த்துவந்த மருத்துவரோ எச்ச ரித்தார்;
படியேறிச் செல்லுவதும் தீமை என்றே!
ஆத்திரத்தால், மருமகளை அடக்கி யாளும்
ஆறாத திமிர்க்கருத்தால், வேத வல்லி,
காத்திருந்தாற் போற்கிடந்த ஏழைப் பெண்ணும்
கமலாவை அடிமையாக்கிக் கொண்டு வந்தாள்!

எளிமையெனும் சுழற்காற்ருல் அணைந்தி டாத
எழில்விளக்காய்ச் சுடர்விட்ட மனைவி கண்டு
முழுமையுற்ருேம் என்றெண்ணி, மூத்த பிள்ளை
முதலிரவின் இதங்காண முனைந்த போது...
வலிமைமிக்க சாவென்னும் பகைவன் வந்து
வளைத்திட்டான்! கிளைத்தெழுந்து படர்ந்து தாவிச்
செழுமையுற்ற பூங்கொடியும் சீர்குலைந்து
சிதைந்ததந்தோ ; வேதவல்லி செய்த தீமை

பொற்ருலி யோடெவையும் போகு மன்ருே?
பொல்லாத கைம்மையினுங் கொடுமை ஏது?
பெற்ருரின் பாழ்மனமும் பேத லிக்கப்—
பிறந்தகத்தை மறந்திடுமோர் நிலைமை யுற்ருள்
குற்றேவல் புரிகின்ற சிற்ரு ளாகக்
கூலியின்றிக் கிடைத்தவளை விடவா செய்வர்!
வற்ருத விழியருவி பொழியும் நீரால்—
மாமியாரின் சொல்நெருப்பை அணைத்து வந்தா

அடுத்துள்ள இளையபிள்ளை படித்த வன்தான்;
அம்மாவுக் கெதிர்வார்த்தை அறிய மாட்டான்!
கடுத்தமுகம் கனல்தெறிக்கக், கமலா வுக்குக்
கட்டளையோ, அவனெதிரில் வரக்கூ டாதாம்!
விடுத்தபெரும் ஆணையினால், அடுக்க ளைக்குள்
விதவையவள் சதமாக முடங்கிப் போனாள்!
எடுத்தழிக்க வொண்ணாத செல்வர் வீட்டில்
ஏந்திழையை இளையவற்குத் தேர்ந்து கொண்டார்.

மாப்பிள்ளை பார்ப்பதற்கு வந்த நாளில்
மங்கலமாய் மேளஇசை முழங்கும் போது...
பூப்போன்ற கமலா, தன் துயர்ம றைத்துப்
புன்னகையும் மின்னலிட முன்னே வந்தாள்.
"கூப்பிட்ட தார்உன்னைக் குடிகெ டுத்த
கோட்டானே? அபசகுனம்! எங்கள் வீட்டுச்
சாப்பாடு தந்திட்ட திமிரோ?" என்று
தலைமுடியை வளைத்திழுத்துத் தரையில் மோத—

வந்திருந்தோர் பரபரப்பாய் ஓடிச் சென்று,
வசைபாடும் மாமியவள் இசைநிறுத்தி,
வெந்திருக்கும் மூத்தவளின் நெஞ்சில் இன்னும்
வேல்பாய்ச்சி விளையாடும் விந்தை கண்டு
வந்தவழி மீண்டனரே! உலக நாதர்—
வாய்ப்புகையை வெளிவிட்டுப் பேச லானர்:
"இந்தபெருந் தாய்ச்சனியன் இருக்கு மட்டும்,
இனியெந்தப் பெண்வருவாள் நம்வீட் டுக்கே

பொங்கிவரும் செங்குருதி, கண்ணீ ரோடு
போட்டியிட்டுப் பெருகிவரக் கண்ட பிள்ளை,
தங்குதடை மீறி, அவள் தலையைத் தாங்கித்,
தன்மடியில் வைத்து,முதல் உதவி செய்தான்
"சங்கடங்கள் தீர்வதற்கும், அம்மா வுக்குச்
சரியான ஒருபாடம் தருவ தற்கும்,
இங்கிவளை மணந்திடுவேன்!" என்றான். தந்தை,
எதிர்ப்பின்றிச் சுருட்டொன்றைப் பற்ற வைத்த




வானுங் கடலுமங்கு மோனக் கலவையிடத்,
தானுமக் காட்சியைக் காணும்பே ராவலுடன்,
காலைமுதற் காய்ந்து, ககனம் ஒளி பாய்ச்சி,
மேலைத் திசைமுழுகும் வெங்கதிர் ஞாயிறும்—
ஆர்த்துப் பொங்கியெழுந் தார்ப்பரித்துக் கை நீட்டி,
வேர்த்துத் துளிசிதறி, வேகமாய்த் தாவி,
நிலமகளை முத்தமிட்டு, நில்லாமல் ஓடி,
விலகி இசைபாடும் சங்கீத வெள்ளலையும்—
மாதர் முகமாய் மலர்ந்து,நல் சீதளத்தைத்
தீதறச் சிந்தித் திகழ்ந்து,பின் அந்திவரத்;
தேம்பிப் பிரிவேங்கிச் சீர்மங்கை மேல்முகடாய்க்
கூம்பித் தவிக்கும் குளிர்வாவித் தாமரையும்—
கண்ணிமைக்கும் நேரத்தில் எண்ணத் தொலையாத
வண்ணப் புதுக்கோலந் தீட்டி வழங்கிவரும்
நீலப் பெருந்திரையின் நீளத்தில் நேர்த்தியாய்க்
காலம் வரும்வரையில் காத்திருந்து, காரிருளில்

விண்வீதி நின்று கண்சிமிட்டுந் தாரகையும்
தண்ணீர்த் தடாகத்தில் தண்டூன்றும் அல்லியும்
சோகந் தவிர்த்துச் சுடராம் அமுதத்தில்
மோகம் மிகுந்திட, மூண்டெழும் ஆவலுற,
இன்ப வெறியூட்டுந் தன் பொற் கிரணத்தால்
மன்பதையை வாழ்விக்க மையல் வளர்ப்பதிலே
எங்குந் தனக்கிடாய் யாதுமில்லை என்றெண்ணிச்
செங்கோலை ஓச்சிவரும் சிங்காரத் தங்கநிலா—

மானும் மயிலினமும் மீனும் விளையாடத்,
தேனும் சுவைக்கரும்பும் தீங்கனியும் ஓங்கிட,
மல்லிகை முல்லை மருக்கொழுந்து சண்பகம்
நல்ல நிறப்பூக்கள் எல்லாம் மலர்ந்திருக்கும்
பூந்தோட்டம்; அங்கெல்லாம் நீந்தித் தவழ்ந்தோடி
மாந்தர் உடல்தீண்டி மாருச் சுகமளிக்கும்
ஈடற்ற தென்றலெனும் இத்தனை சூழ்நிலையில்...
தேடக் கிடைக்காத தெய்வீகக் காதலர்கள்;

ஆணழகன் மன்மதன் ஆரணங்கின் பேரெழிலைக்
காண, அனுபவிக்கக் கண்கோடி வேண்டுமாம்!
தந்தங் கடைந்தெடுத்த சந்தன மேனியாள்;
சிந்தை கலக்கும் சேல்விழி; பால்மொழி;
கண்டனர் இருவரும்; உண்டனர் பார்வையினை!
விண்டனர் காதலை; விரைவாய் உரையாடி!
பெற்ருேர் அறிந்தார், பிரித்தனரே காதலை...!
சற்றுப் பொழுதில் சரிந்ததவர் காதலும்!

இஃதே கவிஞர் எழுதிவரும் வாடிக்கை!
இஃதன்றி நேர்மாருய் இன்ஞேருலகமும்
உண்டன்ருே? என்கண்ணுல் கண்டது கூறுவேன் :—
பண்டொருநாள் என்ருலும் பான்மை மறையவில்லை;
பட்டப் பகல்வேளை; கொட்டும் பெருமழையில்,
வெட்ட வெளியிலொரு குட்டிச் சுவரருகில்,
கண்பார்வை யற்றிடப் பெண்பிறவி பெற்றதால்
புண்ணியந் தேடுவோர் பண்ணிய தர்மத்தில்

சாகாமல் வாழ்ந்த தமிழ்ப்பெண் ஒருத்தியை...
நோகாமல், மேனி நுடங்காமல் ஆபத்தில்
காலொன் றொடிந்த முடமாகி, ஞாலத்தில்
கோலூன்றித் தாவியே கூவி இரந்துண்போன்...
கிட்ட நெருங்கியே ஒட்டி உறவாடப்,
பட்ட மரந்துளிர்த்து விட்டது காதல் இலை!
தொட்டான் சிலபேசி; விட்டுப் பிரியவில்லை!
கெட்டதா வாழ்வு?கொடி கட்டிப் பறந்ததே!
எம்மை எழுதென் றெனையவர் கேட்கவில்லை;
உண்மை உணர்க உலகு!






காரணந்தான் என்னேடி, தோழி! நானுங்
கற்றவித்தை எல்லாமே காட்டி விட்டேன்!
பூரணமாய் அழகுதரும் சாதனங்கள்
புதுமையாகக் கிடைத்தவற்றை வாங்கி வந்தேன்!
தோரணங்கள் எழில்கூட்டும் பந்தலைப்போல்,
தொகைதொகையாய் அலங்காரம் செய்து கொண்டேன்!
சீரணிகள் யாவையுமே அணிந்து தீர்த்தேன்;
சிந்திடுவார் எவரையுமே காண வில்லை!

கண்ணாடி போற்பருவம் முழுதுங் காட்டும்
கவின்நிறைந்த சல்லாவை உடலில் போர்த்திப்,
புண்ணாக்கும் வேல்விழிக்கு மையுந் தீட்டிப்,
பூவிதழ்போல் உதட்டுக்குச் சாயம் இட்டுப்,
பிண்ணாக்கு நிறம்மாற்ற மாவைப் பூசிப்,
பின்னழகு மறைக்காத கச்ச ணிந்து,
மண்ணாளும் அரசிபோலக் கைகள் வீசி,
மதர்ப்பாக நடக்கின்றேன்; பார்ப்போ ரில்லை!

என்ன இந்த எதிர்வீட்டுச் சிறுக்கி மட்டும்
என்னைவிடப் பேரழகி? வயது கொஞ்சம்;
பொன்னிறத்து மேனி; பெருங் கரிய கண்கள்;
பொலிவுதரும் உடற்கட்டு; புதுமை நோக்கு;
புன்னகையில் ஓரளவு கவர்ச்சி உண்டு;
பொய்பேசும் வழக்கமில்லை! இதனால் என்ன?
மன்னரெலாம் அவள்முன்னே வாழ்த்துக் கூறி
வணங்கிடவா வேண்டும்? இது கொடுமையன்றோ?

என்னிடமும் பொருள்நிறைய உண்டென்றாலும்,
எதற்காக அவள்போல வழங்க வேண்டும்?
தன்னைவிட ஏழையர்மேல் இரக்கப் பட்டால்...
தன்னிலைமை கெட்டுவிட்டால் ஏது செய்வேன்?
முன்னிடத்தை நான்தேடி அமரச் சென்றால்
மூளியெனத் தூற்றுகின்றார்; மூட மக்கள்!
என்னிதயம் என்தாழ்வைத் தாங்கினாலும்,
ஏற்காதே அவள் உயர்வை; அறிவாய் தோழி!




இளங்கிளி என்னும் பேரை
　　இயல்புடன் இட்டார் பெற்றோர்.
பளிங்கினால் இழைத்த சிற்பப்
　　பாவையாய்த் திகழும் அங்கம்.
களங்கமே துளியும் இல்லாக்
　　கவின்நிறை மதிபோல் தோற்றம்
விளங்கிட, இளைஞர் நெஞ்சம்
　　விழுங்கிடும் எழிலைக் கொண்டாள்!

காலையில் எழுந்த பின்னர்—
　　கல்லூரி செல்வ தற்குள்
சேலையில் நான்கு மாற்றிச்,
　　சிறகிலாக் கச்ச ணிந்து,
வேலையும் வெல்லும் கூர்மை
　　விழிகளில் மையுந் தீட்டிச்,
சாலையில் நடந்து சென்றால்...
　　சதிராட்டம் இளைஞர் காண்பர்!

எதிர்ப்புற மாக வந்தும்,
‘மணி என்ன?’ என்று கேட்டும்,
பதில்பெறு விடினுங் கூடப்
பணிவுடன் வணக்கஞ் செய்தும்,
மதிப்புள உடையு டுத்தி
மார்பினை நிமிர்த்திக் காட்டிக்
கொதிப்புறும் உள்ளங் கொண்டு
கூட்டமாய்ப் பின்னே செல்வார்!

யாரையுந் துச்ச மாக
எண்ணினள் இதுவ ரைக்கும்:
பாரையே ஆளத் தக்க
பட்டத்திற் குரிய ளேனும்
கூரையில் லாத வீடாம்
கொழுநனை நாடா வாழ்க்கை!
‘யாரைத்தான் தேர்ந்தெ டுப்பாள்?’
என்றேங்கி நின்றார் பல்லோர்!

தத்துவப் பாடஞ் சொல்லுந்

தகைமையால் பட்டம் பெற்ற

வித்தகர் ஆகி வந்த

விரிவுரை யாளர் ஓர்நாள்

சத்துள கருத்தைச் சொல்லிச்

"சந்தேகம் உண்டா?" என்றார்;

நித்திரை கலைந்தாற் போல

இளங்கிளி விழித்து நின்றாள்!

பெண்மனப் போக்கின் ஆழம்

பிறராலே உணர்தல் ஆமோ?

தன்மனம் தேடிச் சென்ற

தத்துவ ஆசா னுக்கே

நன்மனை யாட்டி யானாள்,

நாடெலாம் வியந்து பேச!

பொன்,மணி யாவுந் தந்து

பூரித்துச் சென்றார் பெற்றோர்!

நினைத்தவா றின்ப வாழ்க்கை
　　நேர்ந்ததாய் நம்பிக் கைதான்!
தினைத்துணை அன்பும் இன்றித்
　　தேன்நிலவு இனிப்ப தெங்கே?
'பனைத்துணை படித்தி ருந்தும்,
　　பக்குவம் பெறாத வர்பால்
அனைத்துமே பாழ் பாழ்', என்றே
　　அரற்றினாள் பருவக் கிள்ளை!

வீசிடுந் தென்றற் காற்றில்
　　மிதந்திடும் மலரின் வாசம்
நாசியைத் தொடுவ தில்லை;
　　நல்வீணை நரம்பு போலப்
பேசிடுந் துணைவி சொற்கள்
　　பெருங்காதில் வீழ்வ தில்லை;
கூசிடா ஒப்ப னைகள்
　　கொண்டவர் காண்ப தில்லை!

தீண்டிட அருகிற் செல்வாள்;
    திடுக்குற்று விலகி நின்று
வேண்டுவார், பயிலும் போது
    விளையாட்டு கூடா தென்று!
"மாண்டிட எனவ தைக்க
    மணந்தது குற்றம்!" என்பாள்;
"ஆண்டினிற் சிறிய உன்னை
    அழைத்தும் யானோ?" என்பார்.

'என்னுடன் பேசில் இன்பம்
    என்விழி பருகின் சொர்க்கம்
பொன்னுடல் தன்னைத் தொட்டால்
    பூலோகம் ஈடாம் என்ற
மன்னவர் பலர்இ ருந்தார்!
    மதியிழந் தும்மைத் தேர்ந்தேன்!
இன்னுமேன் உயிர்வாழ் கின்றேன்?'
    என்றொரு முடங்கல் தீட்டித்

தத்துவத் தார்க்குச் சேர்த்துத்
தனியிடம் மறைந்து நின்றாள்;
பித்தனாய் மாறி னாற்போல்
பெருங்குர லெழுப்பி அன்னார்,
"சித்தமே அறிந்தி டாது
சென்றாயே, உயிரே! உன்னை
நித்திய கன்னி யாய்என்
நினைவிலே பதித்தி ருந்தேன்!

தனியனாய் வாழ மாட்டேன்
தங்கமே! உனைப்பி ரிந்தே
இனியெனக் கென்ன வேலை?
என்கல்வி உன்னைக் கொன்ற
சனியனோ?" எனச்ச பித்துத்
தற்கொலை செயமு யன்றார்!
"இனிமையின் எல்லை கண்டேன்,
எனையாள்வீர்!" எனத் தடுத்தாள்!




சுருண்டமுடி, நேர்வகிடு, சிவந்த மேனி,
சுறுசுறுப்பாய் இயங்குகின்ற கால்கள், கைகள்;
மருண்டெதையும் நோக்காத மிதந்த பார்வை;
வாயிதழில் தொத்திநிற்கும் புன்னகைதான்!
இருண்டநிறக் காற்சட்டை, முழுக்கைச் சட்டை,
ஏற்றவாறு தொங்குகின்ற கழுத்துப் பட்டை!
உருண்டோடி ஒன்றையொன்று துரத்திச் செல்லும்
உந்துவண்டி விரைவுகுன்றி, ஓரம் நிற்க—

இடக்கையில் கருப்புநிறச் சிறிய தோல்பை
எடுத்தவாறு கீழிறங்கி நேரே பார்த்தான்.
அடுக்கிவைத்த பெட்டிபோல உயர்ந்து நிற்கும்
அண்ணாந்தால் கழுத்துநோவும் மாடமொன்றில்
முடுக்கிவிட்டால் மேலேற்றும் படியில் சென்று
மூடியதும், பொத்தானில் விரலை வைத்தான்.
மிடுக்காக ஓர்கணத்தில் மூன்றும் மாடி
மீதிறங்கி, வெளியேறி, முன்னே நோக்கி,

எதிர்ப்புறத்தில் சாத்தப்பட் டிருந்த தான
    எழில்மிக்க கதவின்மேல் நளின மாக
அதிராமல் நகநுனியால் தட்டும் போதே—
    'ஆ'வென்று திறந்திடவே—உள்நு ழைந்தான்
சதிராடும் மயில்போன்ற மங்கை நல்லாள்—
    "சரியான நேரத்தில் வந்தீர்!" என்றே
புதிர்போட்டாள்; சாய்வாக அமரச் சொன்னாள்.
    "புறப்பட்டு வரும்வழியில் பயணம் நன்றாய்

இனிமையுடன் இருந்ததா?" என்றார்வத் தோடும்
    இன்சுவைநீர் சிற்றுண்டி தந்து கேட்டாள்!
"தனிமையினால் தவித்திருப்பீர்?" என்றாள். "என்றன்
    தங்கையினி உடன்வருவாள்; அச்ச மில்லை!
அநியாயக் குறும்பிஅவள்; பேச்சுக் காரி!
    அழகைப்போல் மிகுதியான அறிவும் உண்டு!
சனியனே! இன்னுமென்ன வெட்கம்? உன்னைச்
    சரியாகப் பார்க்கட்டும்; உட்கார்!"; என்றாள்.

திருவாளர் மணிக்குஉன்னைப் பிடித்துப் போகும்!
சென்னையிலே உயர்அலுவல் எனினும், இன்றே
பெருநகராம் பம்பாய்க்குப் புதிதாய் வந்தார்!
பேசுதற்கும், பிரியமுடன் பழகு தற்கும்,
அருவாய்ப்பாய் உந்துவண்டி ஏறி, நீவிர்
அரைநாளில் ஓரளவு சுற்றிப் பார்த்து,
வருவீர்! நான், அதற்குள் என் கணவர் இங்கே
வரக்கூடு மா,என்று தெரிவேன்" என்றாள்!

திகைப்பாலே வாய்மொழியை மறந்திருந்த
செல்வனுக்குக் கசந்திடுமோ இவ்வேற் பாடு?
மிகப்பலவாய்ப் பல்தெரியக் குழறிக் கொண்டே
வெளிச்சென்றான், துணையான இளம்பெண் ணோடு!
நகைப்பன்றி வேறுநகை அணியா மங்கை
நாகரிக உச்சியிலே நிமிர்ந்து நின்றாள்;
புகைபோன்ற புடைவைக்குள் கொப்பூழ் தோன்றும்
புதுமையான கையில்லாச் சட்டை மேலே!

புத்தரைப்போல் உயர்கொண்டை! குதியு யர்ந்த
பொன்னிறத்துக் காற்செருப்பே! உதட்டில் சாயம்!
மெத்தவிரை வாய்ச்செல்லும் வண்டி நின்றால்,
மெதுவாக அவள்தோள்மேல் வீழ்வான்; மீள்வான்!
வித்தியாச எண்ணமின்றிச் சிறிது தூரம்
விறுவிறுப்பாய்ப் பேசிவந்தாள் கூச்ச மின்றி
உத்தமனும் அல்லன் அவன்! உணர்வு மங்கி
உதட்டோடும் இதழ்பொருத்தி முத்தம் ஈந்தான்!

அவ்வளவே...! 'பளீர்' என்று மின்ன லைப்போல்
அறைந்திட்டாள் கன்னத்தில் மாறி, மாறி!
செவ்வாயில் குருதிகொட்டத் திடுக்கிட் டுப்போய்ச்
சிந்துகின்ற கண்ணீரும் துடைத்தி டாமல்—
"இவ்வளவும் உன்தமக்கை செய்த குற்றம்!
யான் உன்னைப் பெண்பார்க்க வரவே யில்லை!
எவ்வளவோ தடுத்துரைக்க எண்ணிக் கூட,
என்பேச்சை எங்கேஉன் அக்கா கேட்டாள்?

நண்பனுக்குத் திருமணந்தான் நடந்த போது
நலிந்திருந்தாள் என்மனைவி பிள்ளைப் பேற்றால்;
அன்புடனே அழைத்தும்வர இயல வில்லை;
அலுவலகம் விடுமுறையால் இன்று வந்தேன்!
என்பொல்லாக் காலமன்றோ? இரண்டாம் மாடி
ஏறுதற்குத், தவறுதலாய் மூன்றில் வந்து,
முன்பல்லைப் பறிகொடுத்தேன்! எங்கே சொல்வேன்?
முகத்தையெங்கே வைத்திடுவேன்" எனக் கரைந்தான்.

வண்டியோட்டி வியப்புடனே நிறுத்தி விட்டான்.
மராட்டிமொழி பேசவல்ல அழகு நங்கை,
கண்டேகர் என்கின்ற மருத்து வர்பால்
கடிதாக ஓட்டுமாறு சொல்லிக் கொண்டே—
தண்டனையால் தவிக்கின்ற பிள்ளைக் குத்தன்
தலைப்புச்சே லைகிழித்துத் துடைத்தாள் வாயை!
மண்டிவரும் குருதியினைப் பார்த்த பின்னே,
மன்னிப்புக் கோருகின்றாள் தவற்றுக் காக!

அங்கிதற்குள் நிகழ்ந்த ஒன்றை அறிய லாமா?

அதேநேரம்; அதே வீட்டின் இரண்டாம் மாடி:—

சங்கீதச் சீழ்க்கைஒலி எழுப்பிக் கொண்டே—

'சட்டென்று, திறந்திருந்த அறைநு ழைந்து—

"சிங்காரச் சென்னைநகர் வாழ்வோன்; நான்தான்!

சிறியவன்என் பெயர் மணியன்! ஆமாம், மீனு!

எங்கேஉன் அத்திம்பேர் காண வில்லை?

எதிர்பார்க்கும் அக்காவும் எங்கே போனாள்?

புதிதாக வந்தாலும் சரியாய் வந்தேன்!

புரிகிறதா என் திறமை? போகப் போக

அறியாகக் காண்பாய் நீ; அதிருக் கட்டும்;

அலங்காரம் போதுமென்று நிறுத்தி விட்டாய்?

குதிகாலை மறைப்பதற்கா புடைவை? என்ன...

குடும்பப்பெண் போல் காலின் விரலில் மெட்டி?

இதில்ஏது சட்டமென்று சொல்லு கின்றாய்?

இங்கெல்லாம் இப்படியா? அறியேன்!" என்று

மூதடுற்கு மறந்துவிட்ட குழாய்த்தண் ணீர்போல்
மொள்ளாமல் வார்த்தைகளைக் கொட்டிக் கொண்டே
கூடுதலாய்ப் பேசுகின்றான் ஒருவன்! 'நல்ல
கோமாளியா? பித்தனா?' என்றேங்கி
வாடுகிறாள் தனிமையிலே உள்ளி ருக்கும்
வனிதையவள், அண்மையிலே மணந்து வந்தாள்!
,ஓடுதற்கும் வழியின்றி மறைக்கின் றானே;
ஒருவழியுங் காணேனே!' எனத்த வித்துத்—

"தவறாக..." எனப்பேச்சைத் துவக்கு தற்குள்—
"தயவுசெய்து நீ அவ்வா றெண்ண வேண்டாம்,
சுவரா நான்? அவர்களெல்லாம் வரும்வ ரைக்கும்
சுவையாகப் பாட்டொன்று பாடேன்; கேட்போம்!
எவருடைய இசையரங்கும் நானில் லாமல்
என்ஊரில் நிகழாது! பைத்தி யந்தான்!
நவராத்ரிப் பொம்மைபோல் அசைய மாட்டேன்!
நாணமென்ன? பக்கத்தில் அமர லாமே!"

படபடெனப் பேசியவன் பின்ந கர்ந்தான்—
　　பளபளக்கும் சலவைக்கல் தரைவ ழுக்கித்
தடதடெனக் குப்புறவே வீழ்ந்தான்! கீழே
　　தரைமீது முகம் பதிய—மூக்கும் பல்லும்
கடகடென மோதியதால் நிலம்சி வக்கக்
　　கண்டுநின்ற பெண்தகையாள் கதிக லங்கிச்
சடசடென நீர்தந்து கழுவச் சொல்லிச்
　　"சடுதியிலே என்பின்னர் வாரும்!" என்று—

கண்டேகர் மருத்துமனை அழைத்துச் சென்றாள்!
　　கனவேக மாய்வந்த இருவர் கண்டு,
பண்டுவந்த நோயாளி முறைத்துப் பார்த்தான்:
　　பழையநண்பன் மணியெனவும் புரிந்து கொண்டான்.
பெண்டிருமே சந்தித்து விவரம் பேசிப்
　　பிழைநேர்ந்த காரணங்கள் அறிந்து விட்டார்!
திண்டாட்டம் தீர்ந்துண்மை தெளிந்த தேனும்
　　சிதறிவிட்ட பற்களுக்குப் பொறுப்பு யாரோ?




கல்லூரி விடுதி தன்னில்
கண்ணனும் முருக வேளும்
எல்லாரும் போல அன்றி
இணைபிரி யாத நண்பர்!
கல்வியில் துறைகள் வேறாய்க்
கற்றனர் எனினும், மற்ற
பல்வகை நடப்பும் ஒன்று
படுத்தின; அறையும் ஒன்றாம்!

இருபது வயதை எட்டும்
எழில்மிகு கனவுக் காலம்;
பருவமோ மனித வாழ்வில்
பக்குவம் தோன்றா நேரம்;
ஒருவரின் உடையை மற்றோர்
உடுத்திடல் கண்ட தோழர்
‘இருவரும் மனைவி யையும்
மாற்றுவர்’ என்றும் சொன்னார்!

தோள்மீது கையைப் போட்டுத்

துடிப்புடன் முருக வேளும்

கோள்மூட்டும் தோழர் கூட்டம்

குமைந்திட உறுதி தந்தான்!

"நாள்மட்டும் என்றோ? ஆனல்

நட்புக்கோர் எடுத்துக் காட்டாய்

ஆள்மாற்றச் சம்ம தித்தேன்;

அறைகூவல் ஏற்பீர்!" என்றான்.

பெற்றோர்கள் பணம்அ னுப்பப்

பிள்ளையர் பொறுப்பு ணர்ந்து

கற்றல்தான் உறுதி! அன்றிக்,

காலத்தைக் கரைத்து விட்டு,

மற்றோர்க்குப் பார மாகி

மகிழ்பவர் நிறைய உண்டே!

சற்றேனும் எதிர்கா லத்தைச்

சார்ந்திடின் தவறே இல்லை.

முருகவேள் பட்டம் பெற்று,
மொழியியல் வல்லா ளுகி,
பெருகவோர் அலுவல் தேடிப்,
பிறர்மெச்சும் வாழ்வு நேர
உருகிடும் கண்ணன் விட்டே
ஊர் மாறி வந்து சேர்ந்தான்!
கருகிய பயிராய் நண்பன்
கலங்கினுன் கண்ணீர் சிந்தி!

கனிமொழி என்னும் பேரைக்
காரணப் பெயராய்த் தாங்கி,
இனிமையும் எழிலும் கூடி
இளமையிற் கொலுவி ருந்தும்
தனிமையைத் தீர்க்கொ ணுது,
தந்தைக்குக் கவலை யாகிப்
பனிமலர் ஒன்று வாடும்
பான்மையைக் கண்ட சுற்றம்—

இருமனம் ஒருங்கிணைத்தே
எழில்மணம் பரப்பும் நல்ல
திருமணம் இருவருக்கும்
சேர்ந்தனர்! ஓலை பெற்றும்
வருமாறு புரியாளாகி
வருந்தினன் கண்ணன் தானும்;
திருமணத் தன்றைக் குத்தான்
தேர்வுநாள் ஆனதாலே!

உயிர்க்குயி ரான தோழன்
வரவொண்ணா நிலைமை ஓர்ந்து
செயிர்த்தனன் முருகவேளும்!
சிலையெனுந் துணையிடத்தே
அயர்வினை உரைத்தான்! அன்னாள்,
அவளருங் கொழுநன் நட்பைப்
பயிர்ப்புடன் உணர்ந்து கொண்டாள்;
பழகிய நெருக்கம் கண்டாள்!

புதுமலர்த் தேனை மாந்தி
மயங்கிடும் வண்டு போலப்,
புதுவாழ்வின் தனிமை இன்பம்
பூரண மாக உண்டு,
மெதுவாக நகர்ந்த நாளை
விரட்டியே, நன்மை தீமை
பொதுவாக்கிக், காணும் ஊரார்
போற்றிடும் நெறியில் நின்றார்.

நீண்டநாள் ஆன பின்னர்
நெருங்கிய நண்பன் கண்ணன்
ஆண்டொரு பணியைப் பெற்றேன்
அவ்வூர்க்கு மாற்ற லாகி
வேண்டிய படுக்கை பெட்டி
மிடுக்குடன் வந்து சேர்ந்தான்
'மீண்டும் நாம் கூடி ேனாமே;
விந்தையே! எனமகிழ்ந்தார்.

"கனிமொழி வா வா; என்றன்
கண்ணனைப் பார்த்துக் கொள்வாய்;
இனிமேல்நீ என்னைப் போலே
இவனையுங் கருத வேண்டும்;
தனியாக வேறு வீட்டில்
தவித்திடா வண்ணம், இங்கே
எனக்குள வசதி முற்றும்
ஏற்பாடு செய்வாய்!" என்றான்.

கொழுநனே தெய்வம் என்னுங்
குலக்கொடி, கரங்கு வித்துத்
தொழுதனள் கூறு கின்றாள்:—
துணைவரின் துணைவ ருக்குப்
பழுதிலா வாறு பார்க்கும்
பக்குவந் தெரிந்த வள்நான்
கழுதையாய் உழைப்பேன்!" என்றாள்;
கண்ணனோ திடுக்குற் றானே!

அப்பாவி முருக வேளோ—
"அவளது நகைச்சு வைக்குத்
தப்பாகப் பொருள்கொள் ளாதே!
தயங்காதே கண்ணு!" என்றான்.
அப்பால்போய் மனையாள் நோக்கி—
"அப்படிச் சொல்ல லாமா;
எப்போது விளையாட்டு?" என்றே
ஏகினன் அலுவ லுக்கே!

கண்ணனே பெயருக் கேற்ற
கண்ணியன்! அன்றோர் நாளில்
நண்ணிடும் முடிவு சற்றும்
நடைமுறைக் கியலு மாவென்(று)
எண்ணிடா உளத்த னாகி,
முருகவேள் இயம்பும் சொல்லைப்
பெண்ணிடம் பேசு கின்றான்,
பிறன்மனை விழையும் பேதை!

'மனைவியை மாற்றிக் கொள்ளும்

வழக்கமும் தமிழர்க் குண்டோ?

நினைவினிற் கூட அந்த

நெறிகெட்ட செயலை எண்ணும்

உனையொரு மனித னென்றே

உள்வீட்டில் தங்க வைத்த

வினையினை யாரி டத்தில்

விளம்புவேன்!' எனவ ருந்திக்

கணவனின் வருகை நோக்கிக்

கனிமொழி காத்தி ருந்தாள்.

உணவினை இருவ ருக்கும்

ஒழுங்காகப் படைத்த பின்னர்;

கனவினிற் கவிதை பாடும்

கட்டிலிற் படுத்துக் கொண்டே

மணவினை முடிந்த நாளாய்

வழங்காத அறிவு ரைத்தாள் :—

“ மார்கழிப் பறங்கிப் பூவை
வாயிற்கோ லத்தில் வைப்பார் ;
கூர்கொளும் வாழைப் பூவைக்
குழம்பாக்கி இலையில் வைப்பார் ;
சீர்கொளும் முல்லைப் பூவைச்
சிறந்திடக் குழலில் வைப்பார் ;
தார்கொளும் எருக்கம் பூவைச்
சுடுகாட்டில் அன்றோ வைப்பார் !

நண்பரிற் கூட இந்த
நால்வகை உண்டே, அத்தான் !
திண்ணையில் அமர்ந்து செல்வோர் ;
தெருவோடு பேசிச் செல்வோர் ;
உண்ணவும் இட்டு வந்தால்
உட்கார்ந்து தின்று செல்வோர் ;
பெண்ணோடு துயிலும் இன்பப்
பேழைக்கும் வந்து செல்வோர் !

என்னவோ பொறுப்பில் லாமல்
எப்போதோ சொன்ன சொல்லை
இன்னமும் நினைவில் கொண்டே
நிறைவேற்ற இங்கு வந்த
கண்ணனே நண்ப ருக்குள்
கடையனும்; கயவ னவான்!
கன்னியர் கற்பின் மேன்மை
கருதாத மூடன்!" என்றாள்.

"நம்பிக்கை மோசம் செய்த
நயவஞ்சக் கள்வன், நட்பாம்
செம்பொன்னைக் கரியாய் எண்ணும்
சீர்கெட்ட கிழோன் தன்னை
வெம்பகை யாக்கி விட்டேன்!
விடுவேனோ?" என்றெ ழுந்தான்,
தம்பியோ கம்பி நீட்டித்
தப்பினான்; உயிர்பி ழைத்தான்!

# உள்ளே



மானங் காத்தாள்.

உடன் பிறந்தேகொல்லும்

தாய்மைப் போர்.

அளவோடு பிள்ளை.

மருத்துவரின் மனமாற்றம்.

இல்லாளும் நிலமெனும் நல்லாளும்.

தமிழ்ப் பண்பு காத்தார்.

கூட்டுறவே நாட்டுயர்வு.

பள்ளித் தோழி.




காலையிலே கழனிக்குச் செல்வார் ; வெய்யில்
கடுமையாக ஏறியபின் வீடு வந்தும்
வேலையிலே முதியவரின் சாயல் இன்றி
மிடுக்கிருக்கும் ; சுறுசுறுப்பு மிகுந்தி ருக்கும் !
மாலையிலே மையிருட்டுப் படரு முன்னர்
மடிப்புடனே சலவையுடை தரித்த வாறு,
சாலையிலே கைப்பிரம்பைச் சுழற்றிக் கொண்டே
சடசடென நடந்திடுவார் ; இரவே மீள்வார் !

" இந்நேரம் நகரத்தில் அலுவல் என்ன ?
என்றவரின் மனைவிளக்குக் கேட்ப தில்லை.
பொன்னேபோல் கணவரையே போற்றிக் கொண்டு
புழுக்கத்தை மனத்திற்குள் மூடிக் காப்பாள் !
தன்னிடத்தில் இல்லாத எதையோ அந்தத்
தையலிடம் பெறத்தானே செல்லு கின்றார் ?
'என்னிடத்தே வைத்த அன்புங் குறையக் காணேன் ;
ஏனதிலே தலையிடுதல் ?' என்றி ருப்பாள்.

பத்தாண்டு காலத்தின் முன்னே, ஓர் நாள்
பணம்கேட்க நகருக்குச் சென்ற போது
வித்தாரக் கள்வன், இவர் கடனுக் கஞ்சி
வீட்டைவிட்டே மறைந்தோடி ஒழிந்து போகக்
கொத்தாத கனிபோன்ற மனைவி ஒன்று
கொடுமையிலேக் காட்பட்டுத் தவித்தல் கண்டு
பித்தான நெஞ்சத்தில் இரக்கம் பொங்கப்
பேணிவரத் தலைப்பட்ட அன்பு நாதர்...

ஏமாந்த கமலத்தைத் தேற்றச் சென்றே
இனம்விளங்கா மனமயக்கம் எய்தப் பெற்றுர் !
காமாந்த காரமில்லை ; ஆனல் இன்பக்
காதலென்று கூறுதற்கோ வயது மில்லை !
சாமான்ய அன்புமில்லை ; காணு விட்டால்
சாவதற்கும் துணிகின்ருள் கமலம் ! இந்தப்
பூமான்மேல் உயிர்வைத்தாள் ! உலகம் கண்டால்
புரளிசெய்யும் என்பதனல் முடங்கி வாழ்ந்தாள் !

அன்புவெள்ளம் பெருகிவரும் உள்ள மேனும்
ஆற்றுவெள்ளம் கோடையிலே வறண்டாற் போல—
என்பு நரம் புக்குருதி தசைதோல் சேர்ந்த
இவ்வுடலும் நோய்ப்படுதல் இயல்பே யன்றோ?
அன்புநாதர் காய்ச்சலினால் அவதி யுற்றார்;
ஐந்தாறு நாளாக எழுவே யில்லை!
தன்பேதைக் கமலமுகம் மலரச் செய்யும்
தனிக்கதிரோன் காணாது வாடும் என்றே

மெதுவாகத் துணைநலத்தை அருக ழைத்து
வெண்கூந்தல் கோதிவிட்டுத் தயக்கத்தோடும்,
எதுவரினும் சரி என்ற உறுதி யோடும்,
ஏக்கமுறும் இதயத்தைத் திறந்து காட்டி,
இதுகாறுங் கூறாத செய்தி சொல்லி
இட்டுவர இறைஞ்சுகின்றார்! ஆயின் அன்னை
"பொதுவாக இதுநமக்குப் பழக்க மில்லை;
போர்முனையில் உள்ளமகன் வரப்போ கின்றான்.

கடிந்துகொள்வான்'' என மறுக்க—மகனும் வந்தான் !
கண்களிலே புனல்சிந்தக் கதையைச் சொன்னாள்.
இடிந்துவிட்டான் ! “ எவளந்த இழிகுலத்தாள்,
என்தந்தை பணம் பறிக்கச் சூழ்ச்சி செய்தாள் ?
முடிந்துவிட்ட நாடகந்தான் ! உடனே சென்று
மூதேவித் தொடர்புகளை முறிப்பேன் !'' என்றான்.
ஒடிந்துவிழும் உள்ளத்தை நிமிர்த்திக் கொள்ள
உட்கார முயல்கின்ற தந்தை காலில்......

“ அய்யோ, என் துரையே !'' என்றோடி வீழ்ந்தே
அவிழ்ந்தலையுங் கூந்தலுடன் விழிநீர் ஓட
மெய்சோரப் புலம்புகின்ற கமலம்—தன்னை
மேம்படுத்தித் தான்படுத்த இறைவன் நோக்கிப்
பொய்யோ நம் வாழ்வெல்லாம் ? புனிதங் கெட்டுப்
புன்மொழிகள் கேட்டுயிருந் தரியேன் !'' என்றாள்;
மெய்யாக்கி வெற்றுடலைக் கிடத்தி விட்டு,
மேன்மையுடன் உயிர்நீத்து மானங் காத்தாள் !




அரிசியிலே கல்பொறுக்கிக் கொண்டிருந்தேன் ;
அடுத்தவீட்டுச் செங்கமலம் உள்ளே வந்தாள்,
வரிசையான செம்பற்கள் வெளியே தோன்ற !
"வாடியம்மா ?" என்றழைத்தேன் வாடிக் கைதான்.
கரிசனமாய்க் கையிலுள்ள முறத்தை வாங்கிக்
"கல்லுக்கும் அரிசிக்கும் வேறு பாடே
சரியாகப் புரிவதில்லை இப்போ தெல்லாம் ;
சரிதானு அக்கா, நான் சொல்வ ?" தென்ருள்.

" இப்படியே மனிதரிலும் இருக்கின் ருர்கள்
யாரென்ப தறிவாயா ?" என்று கேட்டேன் ;
அப்படியே தலைகவிழ்ந்து நிலத்தை நோக்கி
அங்கமெலாம் குன்றிப்போய்க் குறுகிவிட்டாள்.
" எப்படி நீ தெருவிலுள்ள வீட்டார்க் கெல்லாம்
என்வீட்டில் இருவருக்கும் சண்டை என்று
செப்பிவந்தாய் ? இவைதாம் நீ எமக்குச் செய்யும்
சிறப்பான உதவிகளோ ? உண்மை என்ன :—

அலுவலகக் கலைமன்ற நாடகத்தில்
அடக்குமுறைக் கணவனாக அவர் நடிக்கக்—
கொலுவிருக்கும் பொம்மையென வாய்பேசாத
குணவதியாய் நான் நடிக்கும் காட்சி ஒன்றில்...
வலுவுள்ள தடியாலே அடித்துப் போடும்
மனமுருக்கும் ஒத்திகையை நடத்திப்பார்த்தோம்.
சிலுவையிலே வதைபட்ட ஏசுவோடு
சேர்ந்திருந்த யூதாசாம் துரோகியைப்போல்—

எங்களது நலம்விரும்பும் தோழி போல
என்றென்றும் பழகிவந்து தீமை செய்தாய்
செங்கமலம்! உனைச்சொல்லிக் குற்றமில்லை!
செந்தமிழின் பெயராலே வாழ்வை ஓட்டித்
தங்களையே வளர்த்துவரும் சிலபேர், இன்று
தமிழழிக்கும் பகைவரது கூலியாளாய்ச்,
சிங்கமென மொழிகாக்கும் மறவர் தம்மைச்
சிறுமதியால் தாக்குகின்றார்; அவரும் வாழ்க!




பரந்தாமன் சீத்தாவை மணம்புரிந்து
பத்தாண்டு காலத்தைக் கழிப்பதற்குள் —
வருந்தாத நேரமில்லை; குலந்தழைக்க
வழித்தோன்றல் ஒன்றேனுங் காணோமென்று!
சிறந்ததெனப் பெரியோர்கள் மொழியைக் கேட்டுச்
செல்லாத திருத்தலங்கள் எங்குமில்லை!
" இறந்தாலும் 'புத்' என்ற நரகுக் கன்றோ
ஏகிடுவோம்!" என்றஞ்சி நாளும் செத்தான்!

ஏங்காதோ பெண்ணுள்ளம் தாய்மைக் காக?
ஏற்றிடுமோ மலடியெனும் இழிந்த சொல்லை?
தாங்காத துயரத்தை மறைத்த வாறே
தனிமையிலே தான்பெருக்கும் கண்ணீர் ஓடை!
நீங்காத வாஞ்சையுடன் கணவன் கொண்ட
நெருக்கத்தில் சிறு பிளவு தோன்றக் கண்டாள்.
தீங்கான பாதையிலே போகான் என்ற
சிறப்புக்கும் மாசுவர நடக்க லானான்!

கொஞ்சி மனம் மகிழுதற்குக் குழந்தையில்லாக்
குற்றமெலாம் பெண்மீது மட்டுந் தானோ?
கிஞ்சிற்றும் தன்குறையை எண்ண மாட்டான்!
கெட்டொழியத் திட்டமொன்று தீட்டி விட்டான்
நஞ்சனைய கருத்தளித்தார் சுற்றத் தார்கள்:—
நல்லதொரு பெண்தேடி மணந்து கொண்டால்
எஞ்சியுள்ள வாழ்நாளில் மகன்பி றப்பான்;
ஏராள சொத்துக்கும் வாரி சுஆவான்!

மூத்தாளின் சம்மதத்தைப் பெறுவ தற்கு
முனைந்திட்டான்! கடிதமொன்றை எழுதிக் கொண்
கூத்தாடும் கரங்களொடு, குழறும் வாயால்,
குனிந்த தலை நிமிராத தோற்றங் காட்டிச்
"சித்தா ஓர் கையொப்பம்..." என்ப தற்குள்;
சீற்றத்தால் முகஞ்சிவக்கச் சீறி நின்று,
"சாத்தானின் கையாளாய் ஆனீர், அத்தான்!
சரியான முடிவொன்றை நானே சொல்வேன்:

தங்களுக்கு மகவில்லை ; எனக்குந் தானே ?
தனியாக இன்னொருத்தி வருவ தாலே
தங்களுக்கு மகன்பிறந்தால், எனக்கு நேரும்
சௌகரியம் ஏதுமுண்டோ ? அதனால் இந்தச்
சங்கடத்தைத் தீர்ப்பதற்கு, நானும் மற்றோர்
தகுதியுள்ள கணவரையே தேட வேண்டும் !
இங்கிருவர் மனக்குறையும் தீரு மன்றோ ?
என்ன பதில் ?'' எனக்கேட்டாள் வீர மங்கை !

இடியோசை கேட்டவனைத் திடுக்கிட் டுப்போய்
எதிர்நிற்கும் திறனற்ற கணவன் நோக்கி,
,'அடியாளை மன்னிப்பீர், அத்தான் ! இந்த
அலங்கோலம் யாதொன்றும் நிகழ வேண்டாம் !
முடியாத செயலுண்டோ உலகில் இன்று ?
முதிர்ந்ததோர் உடற்கூறு வல்லா ராலே
விடியாத நம்வாழ்வில் வெள்ளி தோன்றும் ;
விரைந்திடுவோம்! ''என்றிட்டாள், வெற்றி பெற்றாள்!



"அன்றாடம் மாலையிலே வீடு வந்து
அரைக்கவுளி வெற்றிலையைத் தந்து செல்வான்;
இன்றளவும் ஒரு நாளும் நின்றதில்லை ;
இன்னும் ஏன் வரக்காணோம், அல்லா பிச்சை?
என்றுமிலாப் புதுமையாக நேர்ந்ததென்ன?
ஏனப்பா மரியசூசை அறிவாயா நீ?
சென்று அவனைக் கேட்டிடுவாய்; கிடைக்காவிட்டால்,
சிறு கடையில் வாங்கிவா!" என்றேன், போனான்.

வெற்றிலையைப் பக்குவமாய்க் கிள்ளி வந்து,
வெவ்வேறாய்த் தரம்பிரித்து, வாடிக்கைக்கு
விற்றுவரும் எளிதான வருமானத்தில்—
வீட்டுக்குள் இருமனைவி! மாற்றி மாற்றிப்
பெற்றுவிட்ட பிள்ளைகளோ எட்டுப் பேராம்!
பெற்றோர்க்கும் தள்ளாத முதுமைக் காலம்;
வற்றாத வறுமையன்றி என்ன வாழும்?
வாட்டத்தைப் போக்குதற்கு வழிதான் யாது?

கேட்டுவரப் போனனே மரிய சூசை
    கிண்டலான சிரிப்போடு திரும்பி வந்தான் ;
"கேட்டீரா ஐயா, நாம் சொன்ன பேச்சைக்
    கேளாமல் இருமனைவி கொண்ட தாலே
போட்டிக்குப் பிரசவித்தாள் மூத்தாள் ; இன்று
    பொல்லாத காய்ச்சலினல் தொல்லை கண்டாள்.
நாட்டுக்கே தீமையன்றோ இதனல் ; ஐயா,
    நான் கொஞ்சம் விடுவரை செல்வேன்!" என்றான்.

"உனக்கென்ன அதற்குள்ளே விரைவாம்?" என்றேன்.
    "உடல் நலத்தில் குறைவுண்டோ, யார்க்கும் ?"
    என்னத்
தனக்குள்ளே நாணமுற்றுத் தலைக விழ்ந்து,
    தயக்கமுடன் மரியசூசை பேசுகின்றான் :—
"எனக்கொன்றும் இல்லை ஐயா இளைய பெண்ணை
    இங்கழைத்து வந்துள்ளேன் பிரச விக்க ;
மனக்கவலை புரியாத மனைவி, மற்றோர்
    மகவுதர இருக்கின்றாள் இன்றோ, என்றோ ?"

"ஆந்தையினைப் பழித்திட்ட கோட்டான் போல
அவனைப் போய் நீ எள்ளி நகைத்தா யன்றோ?
மாந்தரினம் தழைப்பதுதான் முறையென் றாலும்
வருங்காலக் குடிமக்கள் வதைய வேண்டா!
ஆய்ந்துணர்ந்து குடும்பத்தின் வருமா னத்தை-
அழகான உடல்வளத்தை–எதிர்கா லத்தின்
வேந்தராகப் பிள்ளைகளை வளர்க்கும் வாய்ப்பை—
மேலாகக் கருதிடுவீர், என்போல்!" என்றேன்.





மருத்துவராய்க் கலைப்பட்டம் பெற்ற போதே
வணிகரது மனப்பாங்கும் பெற்றார் போலும்,
விருத்தகிரி! வாயிலின்முன் பலகை மாட்டி,
விளம்பரமாய்க் கட்டணமும் விதித்து விட்டார்!
கருத்தறியக் கால்நூறு; கைபிடித்துக்
கண்ஊசி மருந்தேற்றப் பத்து ரூபாய்;
அறுத்தெறிய முழுநூறு; அங்கே தங்க
அறைக்கூலி அரைநூறு நாளொன்றுக்கே!

நோய்நாடி, நோய்முதலும் நாடித் தேர்ந்து,
நோயாளர் துயருணர்ந்தே, அதுதணிக்கும்
வாய்நாடி, வாய்ப்பச்செய்ம் முறையே யில்லை!
வந்தவரின் பைநாடி, வரவு நோக்கித்,
தாய்நாடு தலைகுனியத் தன்னலத்தால்
தகைபிறழும் வகைமனிதர் எனினும்; ஆங்கே
போய்நாடி உணவாக மருந்தருந்தும்
போக்கற்ற மக்களுக்குக் குறைவே யில்லை!

ஈருருளை வண்டியின்பின் குவளை ஏற்றி,
இரவெல்லாம் கண்விழித்துப் பால் நிரப்பி,
ஊருக்குள் வீடுதொறுங் காலை, மாலை
ஓயாது வழங்கிவரும் கருப்பு சாமி,
யாருக்கும் நல்லபையன்; பாலில் தண்ணீர்
எப்போதும் கலந்ததில்லை! தலைச்சன் பிள்ளைப்
பேறுக்குத் தாய்வீடு சென்ற இல்லாள்
பேணிவந்த குடும்பத்தில் தனித்திருந்தான்!

மகப்பேறு நேரத்தில் சிக்கல் நேர்ந்தால்
மருத்துவச்சிச் செலவுக்குத் தேவையென்று
தகப்பனது பொறுப்புணர்ந்து, பொருள்சே மிக்கத்
தன்னுணவை ஒருவேளை குறைத்துக் கொண்டும்;
மிகப்பழைய வண்டியினைப் பழுது பார்த்து,
விரைவாக மிதிக்காமல் காத்து வந்தும்;
அகப்பட்ட ஒருபணமும் வீணாக் காமல்
அப்படியே உண்டியலில் போட்டுச் சேர்த்தான்

"அன்புள்ள அத்தானை வணங்கு கின்றேன்!
அம்மாவின் கையிலொரு காசு மில்லை!
தன்பேரப் பிள்ளை சிறு குறையு மின்றித்
தாய்மடியில் தவழும்நாள் எதிர்பார்க் கின்றாள்!
என்பயமும் நீங்குதற்கு நூறு ரூபாய்
இப்பொழுதே அனுப்பிவைத்தால் நன்மை யாகும்!
முன்புஉங்கள் உடல்நலத்தைப் பார்த்துக் கொண்டு
முடிந்தவரை உதவிடுக!" என்று தீட்டி

அன்றுவந்த முடங்கலினைப் பைக்குள் இட்டான்;
அதற்குள்ளே ஆறுமுறை படித்து விட்டான்!
"இன்றேநம் குன்றத்தூர் ஐயா வீட்டில்
இருமாதத் தவணையிலே தீர்த்துக் கொள்ளச்
சென்றிடுவேன் கடன்வாங்க; அனுப்பி வைப்பேன்!
சிறிதேனுங் கவலையில்லை; அமைதி கொள்வாய்!"
என்றெழுதி வைத்தபதில் பையில் நிற்க,
எதிர்பாரா விபத்தினிலே சிக்கிக் கொண்டான்!

பார்த்தவர்கள் விருத்தகிரி மருத்து வர்பால்
பதைபதைத்துத் துடிதுடித்துத் தூக்கிச் சென்று
சேர்த்துவிட்டார்! சிதருத சிந்தை யோடு—
செயலற்றுக் கிடப்பவனைக் கவனிக் காமல்—
"யார்தருவார் என்தொகையை இவன்சார் பாக?"
என்றவுடன் எதிர்நின்ற எவனே தந்தான்!
வேர்த்துவிட்ட முகந்துடைத்துச் சிகிச்சை செய்தார்;
விழுந்திருந்த இருகடிதம் படித்துப் பார்த்தார்!

கண்திறந்தார்! நோயாளி அல்ல; அந்தக்
காசாசை மருத்துவரே! நூறு ரூபாய்
கண்திறவாக் கருப்புசாமி மனைவி பேர்க்குக்
கவனமுடன் அஞ்சலிலே அனுப்பி விட்டார்!
புண்துடைத்தார்! நோயாளன் மீதில் அல்ல;
புன்மனத்தில் தன்னலத்தைத்தூய்மை செய்தார்!
விண்தொடுமோர் உயரத்தை விரைவில் எய்தி,
விலகாத புகழ்மகுடம் சூட்டிக் கொண்டார்!




"கோடிவீட்டுக் குமரப்பன் இங்கி ருந்தால்
குளக்கரையில் எருமைகளை மேய்த்து நிற்பான்;
ஓடிவிட்டான் சென்னைக்கே! திரைப்ப டத்தில்
ஓய்வின்றி நடிப்பதாக ஊரே பேசும்!
மாடிவீடாம்! வாகனமாம்! யார்கண் டார்கள்?
வாரிவிட்ட சுருண்டமுடி கழுத்தில் தொங்கக்—
கூடிவிடும் பாமரர்க்குக் கதைசொல் கின்றான் :—
குவிந்துள்ள செல்வமெலாம் அங்கே தானும்!

பட்டணத்து வாழ்க்கையினைக் குறிக்கோ ளாக்கிப்,
பயின்றிருந்த கணக்கெழுதும் தொழிலை நம்பிப்,
பட்டிக்கா டாகியதன் சிற்றூர் விட்டுப்,
பரம்பரையாய் வசித்துவந்த குடிலை நீங்கிக்,
கட்டணத்துக் காகவொரு நகையை விற்றுக்
கடிதுசெலும் தொடர்வண்டி ஏறிச் சென்றான்—
பெட்டி,சட்டித், துணிமூட்டை, பழைய சாமான்,
பெண்டாட்டி, குழந்தையுடன் கன்னி யப்பன்!

கையிருப்புக் கரையுமட்டும் ஊரைச் சுற்றிக்
  கரைகாணுக் கலம்போலச் சுற்றி வந்தான்!
மையிருட்டுப் படர்ந்தபின்னே சாலை யோரம்
  மரத்தடியில் படுத்திருந்து, விடிந்து பார்த்தான் ..
வையகமே சுழல்வதுபோல் மயக்க முற்ருன்;
  வைத்திருந்த பொருளொன்றுங் காண வில்லை!
ஐயிரண்டு நாள்வரையில் அலைந்து விட்டான்;
  ஆதரிப்பார் யாருமில்லை! ஆங்கி ருந்த

சிற்றுணவும் தேநீரும் விற்று வாழும்
  சிறுகடையின் வாயிலின்முன் நின்று கொண்டு,
"பற்றுவர(வு) எழுதுகிறேன்; ஐயா, என்னைப்
  பணியாளாய்க் கொள்வீரா?" என்று கேட்டான்.
சற்றேனும் எதிர்பார்க்க வில்லை: அங்கே
  சமையலறை அலுவலிலே குமரப் பன்தான்!
உற்றுற்றுப் பார்த்தவனும் உள்ளே ஓட,
  ஒழியாதவியப்போடு திரும்பி வந்தான்!

தடுமாற்றம்; ஏமாற்றம், தயக்கம் தோல்வி,
தாங்கவொணுக் கொடியபசி, களைப்புச் சோர்வு!
"கெடுமார்க்கம் போகவில்லை; எனக்கேன் துன்பம்?
கேடுகெட்ட ஆசையினுல் இழந்தேன் எல்லாம்!
சுடுகாடு செல்வதொன்றே மிச்சம்; என்றன்
சொக்கம்மாள் முகத்தினிலே விழியேன்!" என்று
கடும்வாக்காற் கூறுரைத்தான்; மனமா கேட்கும்?
கன்னியப்பன் புலம்பியதை மனையாள்
கேட்டாள் ;—

"ஏனத்தான்! நானிருக்க எதையிழந்தீர்?
எதற்காக மனக்கவலை? மிகுந்திருக்கும்
மானத்தை முதலாக வைப்போம், வாரீர்!
மன்னவன்என் மாமனுரும் விட்டுச் சென்ற
தானத்தை—ஒருகாணி நிலத்தை—வைத்துத்
தளராமல் உழைத்திட்டால் வளமே பொங்கும்!
வீணத்தான் நகரத்தின் வெளிக்கவர்ச்சி;
விரைவாக ஊர்செல்வோம்!" என்றுள்; சென்றூர்.

கொல்லையிலே நாற்புறமும் வேலி கட்டிக்
கொத்திவிட்டுக் கேணிநீரை இறைத்துப் பாய்ச்சி
நல்லபசுந் தழைஎருவும் சாணத் தோடு
நால்வரப்புப் பாத்திகளில் கலந்து வைத்துத்
தொல்லைதரா நிலமடந்தை சிரிக்கு மாறு
துணையிருவர் தோள்வலியாற் பாடு பட்டார்!
எல்லையிலா இன்பத்தை உழைப்பில் பெற்றார்,
எவரிடத்தும் கைபிசைதல் இல்லை யன்றோ?

கத்தரி, மா, சுரை, முருங்கை, அவரை, பாகல்,
கதலிவாழை, தக்காளி, கருணை, சேம்பு,
கொத்துமல்லி, முளைக்கீரை, பசலை, வள்ளி,
குடமிளகாய், கொத்தவரை, பசுமை கொஞ்சும்
இத்தரையின் புத்துயிராம் விளைவு கண்டார்!
இல்லாளின் மாட்சிமையால் வறுமை கொன்று,
சத்துணவு விற்பனையில் ஊரார் மெச்சச்
சலியாத முயற்சியுடன் வாழ்வை வென்றார்!

# தமிழ்ப் பண்பு காத்தார்



அடக்கந்தான் அமரருக்குள் உய்க்கு மென்ற
அருங்குறளை நெறியாகக் கண்டார் போலும்,
தொடக்கமுதல் துணைவிக்குக் கீழ்ப்ப டிந்து
தொல்லைதரும் பிணக்கின்றி வாழ எண்ணி,
முடக்குவாத நோய்தாக்கக் கொடுமைப் பட்டு
மூன்றாண்டு காலமாக வதையுந் தாயார்
கிடக்கின்ற படுக்கைக்கு விடைகொ டுக்கக்
கிஞ்சிற்றும் தமிழய்யா முனைய வில்லை!

கல்லூரி செல்கின்ற நேரம் போகக்
கடைவீதி சுற்றிடுவார்; கால்கள் நோவப்
பல்வேறு திசைதிரிந்து, குறைந்த காசில்
பண்டங்கள் வாங்கிடுவார்! கஞ்சன் என்று
சொல்லாத பேரில்லை! மாணாக் கர்கள்
சுத்தமாக விடையெழுதித் தந்த போதும்
பொல்லாத ஆசிரியர் பத்துக் கைந்து
புள்ளிகட்கு மேல்வழங்கத் துணிய மாட்டார்!

ஆண்டிறுதித் தேர்வெல்லாம் முடிந்த பின்னர்
ஐந்நூறு விடைத்தாள்கள் கொண்ட சிப்பம்
வேண்டியநற் காப்புடனே மதிப்பீட் டிற்கு
விடுத்திட்டார் கல்விநெறி யாளர் தாமே.
தூண்டிவிட்டாள் தேநீரும் தருவ தாகத்
துணைவியவள் கட்டளையால், தூக்க மின்றி
மூண்டெழுந்த சுறுசுறுப்பால், பத்தே நாளில்
முடித்திட்டார்; அனுப்புதற்கும் திட்ட மிட்டார்

பகட்டாலும், நெல்வயலில் கரும்பு போட்டுப்
பட்டினியால் வாடிடுவோர் வயிற்றை ஏய்த்தும்
திகட்டாத பெருஞ்செல்வம் திரட்டி வைத்துத்
திளைக்கின்ற அளகப்பர் அருமைச் செல்வன்
புகட்டாமல் ஏழையர்க்குக் கிட்டுங் கல்வி
புரியாமல்—வகுப்புக்குப் பல்லாண் டாக
நகர்த்தாமல் உயர்த்திவந்தும், புகுமு கத்தில்
நலமாகச் சிக்கிவிழித் திருந்த காலை...

குறுக்குவழிக் கையூட்டு முறைக ளாலே
குறைந்தபுள்ளி நிறைந்துவிடும் என்று கேட்டு—
முறுக்குடனே செல்வந்தர் வண்டி யேறி
முதன்முதலாய்த் தமிழய்யா வீடு சேர்ந்தார்!
நறுக்கெனவோர் ஆயிரத்தைக் கையில் தந்து
நயமாகத் தான்வந்த செய்தி சொன்னார்!
மறுக்கின்ற கணவரைத்தன் விழியால் சுட்டு,
மனையாட்டி உள்ளழைத்து மிரட்ட லானாள்!

"என்றுளின் நோய்தீர்க்க வகையு மாகும்;
இன்னும்நம் கடனெல்லாம் ஒழிக்கக் கூடும்;
தோன்றாத துணையாகத் தேடி வந்தார்,
சுருக்கமாக முடிப்பீர்!" என் றுணை யிட்டாள்.
'என்றுளே இறந்தாலும், ஈனச் செய்கை
எந்நாளும் புரியேன்!" என் றெதிர்த்துச் சொல்லிச்
சான்றாண்மை மிக்கதமிழ்ப் பண்பு காத்தார்;
தன்மனையாள் ஆணவமும் நொறுக்கி விட்டார்

# கூட்டுறவே நாட்டுயர்வு



“பொன்னய்யா, புளிவிலைதான் என்ன என்றேன்;
புலிவிலையைச் சொல்கின்றீர் போலும்! மேலும்,
என்னய்யா அரிசிவிலை என்றால், நீரோ
இங்கிலாந்தின் அரசிநிலை இயம்பு கின்றீர்!
சின்னய்யா பருப்புவிலை கேட்டான், ஆனால்
சீர்யானை மருப்புவிலை கூறி விட்டீர்!
தன்னையன்றி வேறெவரும் இல்லை என்ற
தருக்குடனே இருக்கின்றீர் அன்றோ? பாரும்!”

முனைப்போடு கல்லூரிப் பட்டம் பெற்ற
முனியப்பன் ஊரார்முன் முறையிட் டானே!
“தனிப்பட்டோர் வாணிபத்தை நடத்தி வந்தால்
தன்னலமும் தரமில்லாச் சரக்கும் மிஞ்சும்!
இனிப்பான சொல்பேசி இலாபஞ் சேர்ப்பார்;
ஏராள சொத்துகளைத் திரட்டிக் கொள்வார்!
தனிப்பாதை இனிப்போவோம் வாரீர்!” என்றான்,
தயக்கமுற்றோர் மயக்கத்தைத் தெளிய வைத்தான்!

கூட்டுறவுத் திட்டத்தின் கொள்கை, நோக்கம்,
குணம்மற்ற யாவையுமே விளக்கிச் சொன்னான்.
நாட்டுயர்வுக் கானநல்ல இயக்கம் என்று
நல்லோர்கள் பாராட்டும் மொழிபு கன்றான்.
வீட்டுக்கு வீடிதிலே பங்கு பெற்று,
விளைகின்ற பயன்முற்றும் பொதுவாய் ஆக்கி,
ஈட்டுகின்ற சமவாய்ப்புக் காண்போம்; என்றே
எடுத்துரைத்தான்; தடுத்துரைக்க ஆளே இல்லை!

மறுநாளே ஆளுக்குப் பத்து ரூபாய்
மதிப்புள்ள பங்குகளை ஊரா ரெல்லாம்
விறுவிறுப்பாய் வாங்கிடவே, பதிவு செய்யும்
வேலையெல்லாம் விரைவாக முடித்து விட்டார்!
சுறுசுறுப்பாய் அரசாங்க உதவி பெற்றுச்
சொந்தமுதல் மிகுதியாக்கி ஊருக் கென்று
வறுமையோட்டும் கூட்டுறவுப் பண்ட சாலை
வகையாக முனியப்பன் அமைத்துத் தந்தான்!

நல்லதொரு பசுமரத்தைச் சாய்ப்ப தற்கும்
நன்செய்யின் விளைச்சலினைக் குறைப்ப தற்கும்
புல்லுருவி—களைமுளைத்தல் போலே, இந்தப்
பொதுநலனை வளர்க்கின்ற செயலில் கூடப்
பொல்லாத மாக்களுமே புகுதல் உண்டாம்!
புனிதத்தை இதனாலே கெடுக்க வேண்டாம்;
வல்லதொரு சட்டத்தின் உதவி கொண்டு
வால்நீட்டு வோர்கொட்டம் அழிப்போம்" என்றான்.

தரமுடைய சரக்குகளைத் தேர்ந்தெ டுத்துத்,
தாங்குகின்ற மலிவுவிலை போட்டு விற்றுச்,
சிரமமின்றி அனைவர்க்கும் வழங்கி வந்தான்.
திறமுடைய முறையிதனை ஊரார் மெச்சி,
உரமுடைய நெஞ்சத்தால் உற்ற நன்மை,
ஒருமனிதன் கொழுக்கின்ற நிலைமை மாற்றி—
மரமனைய மானிடர்க்கும் உரிமை ஈந்த
மகத்தான திட்டமென வாழ்த்தி நின்றார்!




என்பள்ளித் தோழிதானே இராதா; எங்கள்
இருவருக்கும் நெருக்கமாக இராதா நட்பு?
பண்புள்ள பெண்போலப் பாசாங் காகப்
பழகிடுவாள், புரிந்துகொண்டும் மறைத்து வந்தேன்!
அன்புள்ள பெற்ருேரும் அவளுக் கேற்ற
அழகுமண மகனெருவன் தேர்ந்தெ டுத்துப்—
பெண்பார்க்க வருநாளில் எனைய ழைத்தார்.
பெருந்தன்மை யால்உடனே சென்று நின்றேன்.

எதிர்பாரா விந்தை! அந்த இளைஞ ருக்கோ
என்மேல்தான் பெருவிருப்பாம்; எழுதி விட்டார்!
புதிராகத் தோன்றிடினும், விளக்க மாகப்
பொருள்பொதிந்த கடிதத்தில் வரைந்தி ருந்தார்!
“குதிர்போல வளர்ந்திருந்தும் குணத்தில் கோணல்;
குறிப்பாக நான்உணர்ந்து கொண்டேன்!” என்ருர்.
அதிர்ச்சிமிக அடைந்திருப்பாள் இராதா! அன்றே
அவளுக்குச் சமாதானம் கூறச் சென்றேன்!

என்செய்வேன்? என்குற்றம் ஆகா தன்றே!
இளமைமுதல் என்செழித்த முகத்தில் தேங்கும்
புன்சிரிப்பும், கன்னத்தில் குழியும்—காண்போர்
புலனையெலாம் என்பாலே ஈர்க்கும்; தஞ்சை
நன்செய்போல் நயப்பார்க்கு நலன்விளைக்கும்
நற்பண்பா டுடையவள்நான் என்றும்; மாறாய்
வன்செயலுக் கிருப்பிடம்என் தோழி என்றும்
மற்றவர்கள் கூறுகின்ற வழக்கம் உண்டு!

பெருஞ்சிரிப்பு விரவுகின்ற முகத்தோ டொன்றும்
பேசாது வரவேற்றாள் தனிய றைக்குள்!
"வருஞ்செய்தி தெரிந்ததனால் காத்தி ருந்தேன்;
வாடி, என்றன் தோழி, உனக் கேற்ற தாகத்
தரும்பரிசை ஏற்றுக்கொள்!" என்று கூறித்
தடாலென்று குரல்வளையை நெறிக்க லானாள்!
விரும்பியது கிட்டாத வெறுப்பால் வந்த
வினையிதுவோ? விரைந்தோடிப் பிழைத்தேன் யானே!




'இப்படித்தான் வாழவேண்டும்' என்று நல்லோர்,
இயல்பான வரையறைக்குக் கட்டுப் பட்டுச்
செப்பனிட்ட பாதையிலே தடம்மா ருமல்
சீராகச் செலுத்திடுவர் வாழ்க்கைத் தேரை!
'எப்படியும் வாழ்ந்தாக வேண்டும்' என்னும்
இழிகுணத்துக் கயவர்கள், இதய மின்றித்
தப்புமுறை கையாள்வர், மதிப்பு - மானம் -
தரமெல்லாம் கருதமாட்டார்; தேவை, இன்பம்!

ஒருகுலையில் தோன்றுமிரு காய்கள் போல
உடன்பிறந்த இருவர்தாம் சுந்தர் - சேகர்.
பெருநிலையில் வாழ்ந்திட்ட தந்தை யாரோ
பிறர்க்களித்தே வறியநிலை எய்திச் செத்தார்.
உருக்குலைந்த எளிமைதான் எனினும், மூத்தான்
உளநிறைவாய் வெளியேறி நெறியில் நின்முன்.
திருக்குலைந்த ஏழ்மைநிலை வந்துங் கூடச்
செருக்கோடும் மிடுக்கோடும் இளையோன் வாழ்ந்தான்.

சீமான்போல் பகட்டான தோற்றங் காட்டிச்
செல்வந்தர் பெண்களிடம் நயமாய்ப் பேசிக்
காமாந்த கீரத்தில் மூழ்கச் செய்து
கண்மறைக்கும் மோகவெறி ஊட்டிப் பின்னர்-
ஏமாந்த காலத்தில் தங்கம், வைரம்
இரவலெனப் பெற்றுப் பின் ஏப்ப மிட்டுச்
சாமான்ய பதிலுரைப்பான்; கேட்க அஞ்சிச்
சத்தமின்றிக் கோட்டைவிட்டோர் தொகை ஏராளம்!

மாளிகையோ மிகப்பெரிதாய், வெளியார் பார்வை
மறைகின்ற தனியிடத்தில்! இரவு தோறும்
கேளிக்கை குறைவில்லை! கீழோர் கூட்டம்
கேடுகெட்ட செயலுக்குக் குவியும் ஆங்கே!
ஆளுக்குத் தக்கவாறு குடியும், சூதும்
ஆரணங்குச் சேர்க்கையுடன் நிறைய உண்டாம்!
நாளுக்கு நாள் இவைகள் வலுத்த தாலே
நடவடிக்கைக் காளானன் ஒருநாள் சேகர்

காவலர்கள் நாற்புறமும் சூழ்ந்து கொண்டு
　　கண்ணிமைக்கும் நேரத்தில் உள் நு ழைந்தார்!
ஆவலுடன் விளக்கேற்றிப் பார்க்கும் போதில்
　　அந்நகரின் பெருங்குடும்ப ஆண்கள் பெண்கள் -
சேவலுடன் ஏதோவோர் பெட்டை போலச்
　　சீர்குலைந்தும் உணர்விழந்தும் சேர்ந்தி ருந்தார்!
நாவலிமை உள்ளவர்கள் பறந்து போனர்—
　　நாணயங்கள் மிகுந்தோர்க்கு வழியா இல்லை?

போலியாகப் பெருமனிதன் வேட மிட்டுப்
　　பொல்லாத புன்செயலுக் கிடங்கொ டுத்து
வேலியாக மறைத்ததற்குக் கைவி லங்கும்
　　வெளியேறாச் சிறைவாழ்வும் சேகர் பெற்றான்!
தாலிகட்டி மனைவியெனக் கொணர்ந்த தையல்
　　தருணமென ஒருவனுடன் ஓடிப் போனள்!
காலியான மாளிகையை ஏல மிட்டுக்
　　கடன்காரர் பறித்திட்டார்! இதுதான் வாழ்வோ?

# பைத்தியம் தெளிந்தது!





நாடோடி போல்திரிந்த என்னி டத்தே
நயமாக உரையாடி, அன்பு காட்டி,
ஓடோடி உதவிசெய்து, பாச மில்லா
உள்ளத்தில் நல்லிரக்க உணர்வு பெய்து
காடோ, நல் கடற்புறமோ எங்குந் தங்கிக்
காலத்தைக் கொன்றவனுக் கின்று சொந்த
வீடோ,என் றெண்ணுமாறு தனதில் லத்தை
விளங்கவைத்த இராசாத்தி அன்புத் தங்கை.

நாரெல்லாம் பூவோடு சேர்வ தாலே
நறுமணந்தான் பெறுவதுபோல் நானும் ஆனேன்.
ஊரெல்லாம் புகழ்பரப்பி, நாட கத்தில்
ஒப்பற்ற நடிகரெனத் திறனும் பெற்றுப்
பாரெல்லாங் கொண்டாடும் பத்தி நாதன் -
பாசமிக்க என்தங்கை இதயத் துள்ளே
போரெல்லாம் விளைத்திட்டார்! இறுதி வெற்றி
புகழாளன் அவருக்கே! தங்கை தோற்றாள்!!

மணம்புரிந்தார், மனங்கலந்தார், வாழ்க்கை யின்ப

வானத்தில் தேன்சிட்டாய்ப் பறந்து வந்தார்!

குணம்புரிந்து, சினம்பிரிந்து, தினம்மறைந்து

குடும்பத்தைப் பெருக்குதற்குத் திட்டமிட்டார்!

பணம்நிறைந்து, தொழில்சிறந்து, மேன்மை எய்தப்

பத்திநாதன் ஊர்சுற்றல் நிறுத்த வில்லை!

கணம் மறந்தும் கணவனது பிரிவு தாங்காக்

கவலையினால் என் தங்கை கண்ணீர் சிந்தும்!

அவர் நடித்த நாடகத்தை ஓர்நாள் கண்ட

அன்பரசி அழுதுகொண்டே வீடு மீண்டாள்!

தவறில்லை என்றாலும், தொழிலுக் காகத்

தையலரின் தோள்தொட்டு நடித்தல் தீதாம்!

சுவரிடிந்த பாழ்வீடாய்த் தனது வாழ்வுச்

சுவைமடிந்து போனதாகக் கற்பனையால்—

எவரிடத்தும் சொல்லாமல், கடலில் மூழ்கி

இறந்துபடத் துணிந்தனளே, என்ன விந்தை!

ஓவியமாய், உண்ணாத கனியாய்த் தோன்றி
ஓயாமல் நகைபுரியும் மழலை, கண்ணீர்க்
காவியமாய் மாறுதற்கோ வழிவகுத்தாள்?
கணவரிதைக் கேட்டவுடன் பிணம்போலானார்!
"ஆவியெலாம் நீயென்றே கருதியுள்ளேன்;
அற்பமான ஐயத்தால் சொற்ப நாளில்,
பாவியெனும் பழிச்சொல்லை ஏற்றிடாதே!
பார், என்றன் தொழிலையும்நான் விடுப்பேன்!" என்றார்

"பைத்தியந்தான்! நீங்களில்லை; நானே அத்தான்!
பக்குவமில்லாமனத்தின் குறைதான்! என்மேல்
வைத்திருக்கும் ஆழமான அன்பின் எல்லை—
வாழ்வுவேறு, தொழில்வேறும் என்ற உண்மை
மைத்துனராம் என் அண்ணன் தங்கள் சார்பில்
வகையாக எடுத்துரைத்தார்; தெளிவு பெற்றேன்!
வைத்தியமே தேவையில்லை!" என்றாள் தங்கை!
மாப்பிள்ளை மனங்குளிர்ந்தார்; விருந்து தந்தார்!




வண்டியோட்டுங் குப்பண்ணன் பருவக் காளை;
வரவுக்குக் குறைவில்லை; இரவுப் போழ்தில்
கொண்டமட்டுங் குடித்திடுவான்; குதிரை தின்னக்
கொள்வாங்கி வைத்திடுவான்; மீதிக் காசில்
உண்டுவிட்டும் படுப்பதுண்டு! குடிசை காக்கும்
உரிமையுளார் யாருமில்லை! ஊரார் பார்த்துக்
கண்டபடி அலைக்கழியா திருப்பா னென்று
கன்னியம்மாள் என்பவளைக் கட்டிப் போட்டார்!

நிறுத்தவில்லை அவன்பழக்கம்! நேர்மை கெட்டோர்
நெறியற்ற அல்வழியில் காய்ச்சி விற்கும்
வெறுத்தொதுக்க வேண்டியதீச் சரக்கு தம்மை
வீதியிலே புரளுமாறு விழுங்கி விட்டுப்—
பொறுத்திருக்க ஒண்ணாத நீதி மன்றம்
புத்திவர மூன்றுமாதம் சிறையில் தள்ள—
மறுத்து வழக் காடுதற்கு வழியு மின்றி
வதைந்திட்டான்; மனையாளும் தனியே ஏங்க!

மதுமலர்போல் இன்பத்தைத் தேக்கி வைத்து
    வாழ்க்கையதன் சுவைநுகரத் துடித்து வந்த
புதுமணப்பெண், வெறுங்குடிசை—குதிரை-வண்டி-
    பொல்லாத அயல்வீட்டார் கொல்லுங் கண்கள்-
அதுவரையில் அறிந்திராத பிரிவுத் துன்பம்—
    அடிவயிற்றில் வளர்கின்ற கருவின் தொல்லை—
எதுவரினும் துணிவதென ஓட்ட லானாள்,
    எங்குமிலாப் பெண் இயக்கும் குதிரை வண்டி!

குப்பண்ணன் சிறையினின்று வருவான்; மீண்டும்
    குதிரைக்குக் கடிவாளம் பிடிப்பான் சின்னாள்!
இப்புவியின் மக்களினம் பெருக்கு தற்கே
    இயன்றவரை ஒத்துழைக்க வந்த வன்போல்—
தப்பாமல் மனைவிக்குக் குழந்தைப் பேறு
    தந்திடுவான்! மறுபடியும் மதுவில் மூழ்கி,
எப்போதும் குடியிருக்க ஏற்ற தென்றே
    ஏகிடுவான் சிறைக்கோட்டம்; இதுவா டிக்கை!

தாயாகிப் பிள்ளைபெறும் இயந்திரம்போல்
தாங்கவொண்ணாத் துயரத்தைச் சுமந்ததாலும்,
ஓயாத உழைப்பாலும் உடல்நலிந்தே—
உணவுக்கே அனுதினமும் போராட்டத்தால்
நோயாகிப் படுக்கையுடன் கிடக்கலானாள்!
நொடித்துவீழ்ந்த குதிரைக்குக் கால்முறிந்து
நாயாக நலிந்துயிரை விட்டதாலே—
நைந்துமனம் நெகிழ்ந்துருகித் தேய்ந்துபோனாள்

சிறையிலுள்ள கைதிகளை கண்காணிக்கும்
செங்கோட்டான் குப்பண்ணன் பெயரைச் சொல்லி,
முறையுடனே அரைமாதம் விடுப்புத் தந்து
முடுக்கிவிட்டார்! ஊர்நோக்கி வருவதற்குள்—
குறைவாழ்வில் தவித்திட்ட கன்னியம்மாள்
குழந்தைகளைக் கதறிவிட்டுப் போய் விட்டாளே!
நிறைவாழ்வின் கரைகண்டோன் தரையில் வீழ்ந்து
நெற்றிமோதி அழுகின்றான்; பயன்தான் உண்டோ?

பேரறிஞர் அண்ணா அவர்கள், புதுடெல்லி மாநிலங்கள் அவைக்கூட்டத்திற்காகச் சென்றபோது 1965 இறுதியில், ஒரு ஆங்கிலத் திரைப்படம் பார்த்தார்களாம். அந்தக்கதை இவர்களைக் கவர்ந்ததால், அதனை, அப்போது 'காஞ்சி' இதழில் தாம் கையாண்டு வந்த கவிதை நடையில் எழுதி வைத்திருந்தார்கள்.

ஊருக்கு வந்தபோது, நான் வழக்கம்போல் காணச் சென்றிருந்தேன். உடனே என்னிடம் அந்தத் தாள்களைத்தந்து, என்னைத் தம் அருகே அமரச்செய்து அந்தக்கதை முழுவதையும் சொல்லி, "இதை வைத்துக் கொண்டு, நீ உன்னுடைய செய்யுள் நடையில் எழுதிக் கொண்டுவா. 'காஞ்சி' மலரில் வெளியிடலாம்!" என்றார்கள். அவ்வாறே நான் எழுதிக் 'காஞ்சி' மலரில் வெளிவந்தது.

பேரறிஞர் அண்ணா அவர்களின் ஓவியத்தையும், அதை வைத்து நான் எழுதியவற்றையும் அடுத்தடுத்து வெளியிட்டுள்ளேன்; ஒப்பிட்டு நோக்கிட அல்ல! நம்மையெல்லாம் கண்ணீர்க்கடலில் தள்ளிவிட்டுத் தாம் மட்டும் கரையில் அமர்ந்துகொண்ட அண்ணாவை நினைவு கூர்!




ஆங்கிலம் பேசும் அழகுத் திரைப்படத்தைப்
பாங்குடன் கண்டு, பரிந்துரைத்தார் நண்பர்.
விருப்போடு வேண்டியதால் சின்னாள்முன் சென்றேன்.
சிரிப்பினை மூட்டியே, சிந்தனைக்கும் நல்விருந்தாய்
நேர்ந்தது, மேனாட்டார் நேர்த்திமிகு வாழ்வுரைக்கத்
தேர்ந்த சிறந்தகதை; சீராம் கருத்துக்கள் !

பெண்டிர் பலமணம் பெற்றிடும் கொள்கையங்கு
உண்டென்ப தால்அஃது உணர்த்துங் கதையெனினும்
வெற்று நகைச்சுவை வீணாம் எனக்கருதி,
மற்றொரு நற்கருத்தும் மாண்போடு தந்தனரே !

அமெரிக்க நாட்டினில் செல்வம் மிகுதி
அதனைப் பெற்றிடும் அலைச்சலும் அதிகம்
ஈட்டிட முனைந்திடும் இயல்பினே ராங்கு
இல்லற இன்பம் பெற்றிட வில்லை, என்பதைப்
பாங்குடன் அப்படம் காட்டு கின்றது.
மேலும் மேலும் செல்வம் சேர்த்திட
ஓயா தருண்டு உழைத்திடும் அன்னார்
காதலின்பம் தனையும் இழந்துமே
கருவியாகிக்கிடக்கிறார் என்பதே பாடம்.

எத்தனைச் செல்வம் ஈட்டிக் குவிப்பினும்
மனதுக்கோர் நல் மகிழ்ச்சி இல்லையேல்
எற்றுக்குப் பணம்! காகிதக் குவியல்!
மற்றவர் பார்த்து மதித்திட மட்டும்
மாநிதி சேர்த்திடல் மாபெருந் தவறு
என்பதை யெல்லாம் இயம்பிட வில்லை
காட்சிகள் காட்டிக் கருத்தளிக் கின்றார்.

செல்வம் குவித்துந் திருப்தி யடையாமல்
பல்வகை யாற்பாடு பட்டிடுவர், எப்போதும்
மென்மேலுஞ் சேர்க்க விழையும் அமெரிக்கர்,
நன்முறையில் இல்வாழ்வை நாடி அனுபவியார்;
காதலெனும் பேரின்பங் காணு இயந்திரமாய்
மோதிடுவர், என்று மொழியுந் திரைப் படமாம்!

எத்தனையோ மாநிதியை ஈட்டித் திரட்டிடினும்
சித்தங் களிப்படையச் செய்யாது போமாகில்
எற்றுக்குச் செல்வம்; எதிரி மதித்திடவோ?
வெற்றுத்தாள் தாமே, விளைவென்ன? என்பதெல்லாம்
காட்சிகள் வாயிலாய்க் காட்டித் தெளிவுறுத்தும்
மாட்சிமை வாய்ந்த மகத்தான வாய்ப்பாம்!

எளியதோர் குடும்பம், அதிலோர் மங்கை
தந்தை தூயவர் பணத்தை வெறுப்பவர்
பணமே எல்லா பாதகத்தின் வேர்
பணமே மக்களைப் பாவிக ளாக்கிடும்
பணத்திற் காக அலைந்திட வேண்டாம்
போதுமெனும் மனமே பொன்செய் மருந்து
இந்த விதமான அறிவுரைகள் தன்னை
அந்தப் பெரியவரும் நித்தம் தந்து வந்தார்.
இந்தச் சூழ்நிலையில் வளர்ந்த அப் பெண்ணும்
எளிய வாழ்க்கையே இன்ப வாழ்க்கையென
உறுதியாய்க் கொண்டு உலவி வருகின்றாள்.
வாலிபனொருவன் காணுகின்றான் அவளை
வாழ்க்கையில் முன்னேற முயலுபவன் அவனும்
எண்ணம் அவனுக்கு அந்த எழிலாளிடமே
கண் இருந்தும் காளை காணானே அழகை!

ஓர்நாள் இருவரும் மோட்டாரினில் ஏறி
உல்லாசப் பயணம் செய்யச் செல்கின்றார்.
வழியில், மற்றோர் இளைஞன் வருகின்றான்.

எளிய குடும்பத்தின் ஏழையாம் தந்தை,
துளியும் விரும்பார் தூய்மையற்ற செல்வத்தை;
பாதகத்தின் வேராயும், பாவத்தின் தூராயும்
தீதளிக்கும், நல்ல திறனழிக்கும் நாணயங்கள்
தேடி அலையாமல் சிந்தை நிறைபவராம்!

நாடுபோற்றும் அந்த நற்குணத் தந்தையின்
தத்துவம் அத்தனையும் தாங்கும் திடசித்தம்
மொத்தமாய்ப்பெற்றவொரு மோகனப் பெண்மடவாள்
இன்பக் களஞ்சியமாய், ஏழ்மை நிலைவிரும்பி,
அன்பின் உருவாய், அழகியாய் வந்தவளைக்
கண்டான் எழில்காளை! காதல் உருவாக்கிக்
கொண்டாட எண்ணினான்! கூடுதற்கும் என்ன தடை?

ஒருநாள் இருவருமாய் உந்துவண்டி மீதேறி
ஊர்சுற்றி வந்தார்; ஒருவன் எதிர்ப்பட்டான்?

எளிய உடை, தோற்றம், நடை யாவும்
இளைஞனவன் படிப்பாளி, இலட்சியம் கொண்டோன்
அவன்மீது மோடார் சேற்றை இறைத்தது
அவனோ அதற்காக ஆத்திரமும் கொள்ளாது
இனிய முகத்துடனே இருந்ததனைக் கண்டாள்.
இவனே எனக்கேற்ற மணவாளன்
எளிய வாழ்க்கையினில் திளைத்திடலா மென்று
வலிந்தவனைச் சந்தித்து மணம் செய்து கொண்டாள்,
ஏழையை மணந்துகொண்டேன் எனக்கூறத்
தாய், தீ மிதித்தன்ன துடித்திட்டாள் பதறி!

பணமன்றோ பாதகத்தின் இருப்பிடம்
பணமில்லா வாழ்க்கையன்றோ பரமன் வழி
பணமற்றவனை மணந்ததனாலே என்று
பாவை அவள் பேசுகிறாள்; தாய் ஒப்பவில்லை

தோற்றத்தில் நல்ல துணிவுடைமை, தூய்மை, அறிவு
ஆற்றல், எளிமை, அடக்கம் மிகுசான்றோன் !
அன்னவன் மீதே அவர்சென்ற உந்துவண்டி
தண்ணீரைச், சேற்றைத் தவறி இறைத்துமே—
ஆத்திரங் கொள்ளான்; அமைதியாய் நின்றிருந்தான் !
பார்த்திருந்தாள் நங்கை; அவன் பண்பிற் கடிமையாய்
ஏற்ற மணவாளன் இவ்வாய்மை யாளன்எனப்
போற்றிப் புகழ்ந்து, புதியவனைக் கைப்பிடித்தாள் !
இல்லாதான் இல்லாளாய் ஏகினையே என்றவள்தாய்
பொல்லாச் சினங்கொண்டு பொங்கி வசைமொழிந்தாள் !

"அம்மா ! பணந்தான் அநீதியின் தோற்றுவாய் !
இம்மா நிலத்தில் எனக்குப் பொருள் வேண்டா !
செம்மையுற வாழ்வேன், சிறப்பான ஏழ்மையிலே.
எம்மைவாழ்த்" தென்றவள் ஏகிவிட்டாள், தாய்மறுத்தும்!

ஓடைக்கருகினிலோர் பழங்கால வீடு
ஒய்யார ஒளியில்லை ஆடம்பரம் இல்லை
இஃதே இன்பமதை ஈந்திடும் இல்லமெனு
இருவரும் வாழ்ந்தனர் இணைபிரியா முறையில்
உள்ளதைக் கொண்டவர்கள் மகிழ்ந்திருக்கலுற்றார்
பேசிச் சிரித்தவர்கள் பேரின்பங் கண்டார்
வேலைகளை விருப்பமுடன் இருவரும் மேற்கொண்டார்
இல்லறமே நல்லறம் எனும்மொழிக் கேற்பத்தானே !

சொத்துசுகம் இல்லா நிலையினில் இவர்கள்
வாழ்க்கை நடத்தும் விதம் படமாக்கிடவே
வந்தனன் குறும்புமிகு வாலிபனுந்தானே
வனிதையைப் பெற்றிடமுதலில் முயற்சித்தவனே
அழுக்கேறிக் கிடந்ததுகாண் ஆடை
அலங்கோல நிலைஅந்த இல்லம் ஆனாலும் அகமகிழ்வுடனே
அணங்கவளும் பம்பரமாய்ச் சுழன்றே
அடுக்களையில் வேலைபல செய்திடவே கண்டான்
அவள்கணவன் உடனிருந்து உதவிடவும் கண்டான்

நீரோடை ஓரத்தில் நீண்ட பழங்காலக்
கூரைவீ டொன்றிற் குடியேறி, இன்பமுடன்
ஆடம் பரமின்றி, அன்பால் அகமொன்றித்
தேடரிய வாழ்வில் திளைத்தார் இருவருமே !
ஒன்ருய்ப் பணியாற்றி உள்ளதைக் கொண்டுமனம்
நன்ருய் மகிழ்ச்சியுற நல்லறம் பேணிவந்தார் !



உந்துவண்டி ஏற்றி, முன் ஊர்சுற்றிக் காட்டியவன்
வந்திட்டான்; இங்கிருவர் வாழ்வதனைக் கண்டறிய—
தன்னை மணக்காமல் தன்போக்கில் ஏழையின்
பின்னே நடந்திட்ட பெண்ணைப் படம்பிடிக்க—
கந்தலுடைக் கோலம் கண்டான்; வறுமையிலும்
சிந்தை தளராமல் சிற்றெறும்பாய்ச் சுற்றிவந்தாள் !
சேர்ந்து சமையல்கள் செய்திட்டாள்;

ஒழுக்கல்மிகு கூரையினைச் செப்பனிட அவளும்
முயன்றதிலே தோற்றனள், மழைநீரில் நனைந்தே,
இந்தவித இடர்ப்பாட்டில் இவளுள்ளாள்
ஏழையை மணந்ததனால் நேரிட்ட கதியும்
என்றெல்லாம் ஏதேதோ எழுதலா மன்றோ ?
சிற்றம் அவனுக்கு-ஆனால் சிந்தித்தான் வாலிபனோ மிகவும்

மறுநாள் மனைவிட்டுச் சென்ற மணவாளன்
மாலையும் வரவில்லை, இரவுங் காணோம்
என்னானான் என்றெண்ணி ஏக்கம் கொண்டவளும்
இல்லத்தில் காத்திருந்தாள் வரவு எதிர்பார்த்து
எங்கு சென்றனன் ? ஏனிந்த மர்மம் ?
எனைத்தனியே விட்டகன்றுமே வேதனைத்தீயை ஏன்
மூட்டினான்
என்று சினந்தனள் சிற்றிடைப் பெண்ணாள்
நெஞ்சினில் அவனைத்தாங்கி, நீர்சொரி கண்களோடு
சந்தைச் சதுக்கப்பக்கம் சென்றனள் சுந்தரியும்
விந்தையைக் கண்டாற்போல வீழ்ந்தடித்துக் கும்பல்
ஆங்கொரு கடையைநோக்கி விரைந்திடக் கண்டாள்
பெண்ணாள்

பெய்மழையால்
நேர்ந்த ஒழுக்கினையே நேர்செய்தாள்; மேல்நனைந்தாள்!
தாக்குந் துயரெல்லாம் தான்செய் பிழையென்று
நோக்கமாட் டாளோ? நொடியும் உணராளோ?"
என்றேங்கி நின்றான் ஏமாந்த வாலிபனும்!
சென்றதை எண்ணியதால் சீற்றம் பிறந்ததே!



அன்று மறுநாள் அகன்ற மணவாளனை
நின்றெதிர் பார்த்தனள்; நேரந்தான் சென்றது!
மீண்டிட வில்லை! விழிநீர் பெருகிடவே—
'மாண்டிட என்னைவிட்டு மற்றெங்கே சென்றிட்டார்?
கண்டு வருவேன்' எனக் கண்ணீர்க் கனலடக்கிக்
கொண்டு, புறப்பட்டாள்; கூடுகின்ற சந்தைக்கு!
மக்கள்; பெருவெள்ளம் மண்டியெதிர் பாய்ந்ததுபோல்
மிக்கவிரை வாகவொரு திக்கிற் செலக்கண்டாள்.

வருக ! விரைக ! பெறுக ! வருக ! விரைக !
பெரும் கவர்ச்சிகொள் விதமதாக
இவ்வொலி எழுப்புகின்றான் இனிய முகத்தினன் ஆங்கு
எக்களிப் புடனேகூட்டம்; ஏகமாய் விற்பனை தான் !
பொங்கிடும் மகிழ்ச்சி ஆங்கு ததும்பக் கண்டாள்
பொருள் மிகுதியும் விரைந்து குவியக் கண்டாள்.
இவ்விதம் கடைநடத்தும் காளையையும் கண்டாள்
அன்னவன் யாரோ என்னில், மணாளன் ! ஆமாம் !
திகைத்தனள் மாது ஓர் கணம் தீ மிதித்தாற்போல
சிரித்தனள் அவன் நிலையைக் கண்டு மறுகணம்
கண்டனன் காதலின்ப வல்லியைத் தான்
கடைதனில் இருந்தவாறே புன்னகை உதிர்த்தான்
நெருங்கியே வந்த நேரிழையாளிடமே
நேரம் அதிகம் செலவிட முடியா நிலையில்
சென்று செப்பினன் சிந்தையில் மகிழ்ச்சி பொங்க ;
புதுமுறை வாணிபத்தால் பொருள் குவியுதென்று!
வளர்ந்தது ! வளர்ந்தது ! விந்தை வாணிபம் ! !
குவிந்தது ! குவிந்தது ! மாபெரு நிதி ! !

ஆங்கொருவன் கூவும் அமுதக் குரல்கேட்டாள் :-
"வாங்கிடவே வாரீரோ, வண்ணப் பொருட்களையே?
இப்பெரிய வாய்ப்பினிமேல் எப்போதும் கிட்டாது!
தப்பினால் மிக்க தவறாகும், செப்பிடுவேன்!"

கேட்டார்ப் பிணிக்குங் குரல்கேட்டு, மக்களின்
கூட்டம் விரைந்து குவிந்தது வாணிபத்தை!
மங்கை திகைத்து மயங்கி விழுமுன்னர் —
தன்கணவன் தான்வணிகன் என்ப துணர்ந்தாளே!
தன்னையவன் நோக்கித் தலைகுனிந்த ஓர்கணத்தில்
புன்னகை பூத்துப் புகுந்திட்டான் வாணிபத்தில்!
ஏக்கம் பெருகிடவே ஏந்திழையாள் தானெருங்கி
நோக்கினாள்; "நேரம் நொடிப்பொழுதும் வீணாக்கேன்!
பார்த்தனையா, மாமலைபோல் பண்டம் குவிகிறதை?
தீர்த்திடுவேன் நம்வறுமை; செல்க நீ நிம்மதியாய்!"
என்றான், முழுகினான் ஈடற்ற வாணிபத்தில்!
ஒன்றல்ல பற்பலவாய் ஓங்கியதே பல்கி,

குருதி குடித்திட்ட கொல்புலியும்
பிறிதோர் சுவை தேடிப் பெற்றிடாதாம்
வெறி மிகுந்துமே மக்களைக் கொல்லுமாம்
காட்டு முறையது என்கின்றார் கற்றோர்!
நாட்டினிலும் உண்டு அது போலோர் வெறி
பொருள்தேடிப் பெற்றதும் போதுமென் றெண்ணாது
புதிது புதிதாகப் பொருள்தேடி அலைவது
வெறிதான்! அடக்கிட இயலாது என்பர்.
எளிய வாழ்க்கையில் இன்பங் கண்டவன்
ஏளனம் செய்தவன் கிளப்பிய சூட்டினால்
பொருள் தேடிடப் புறப்பட்ட ஆர்வமும்
வெற்றி தந்தது; உடன் வெறியுங் கிளம்பிற்று.
வீடு மறந்தனன், வேல்விழியாள் நினைவும் மறந்தனன்
பெருங்காற் றசைத்திட ஆடும் மரமானான்
பெருநிதி! புதுமாளிகை! ஏற்றம் மிகவும்;
ஆடம்பரம் அவனை அலங்கரித்து நின்றதுகாண்
சுற்றிலும் பார்க்கின்றாள்! பளபளப்பு! மினுமினுப்பு!
கூப்பிட்ட குரலுக்கு ஓடிவர ஆள் அம்பு!

'குருதி குடித்திடும் கொல்புலியின் நாவிற்
பிறிதோர் சுவையும் பிடிக்காதாம்! மாந்தரையே
கொன்று சிவப்பிரத்தம் கொள்ள வெறியாகும்'—
என்றுரைப்பர் காட்டு விலங்கின் இலக்கணமாய்
பொன்னாசை கொண்டோரும் போதுமென எண்ணாமல்
எந்நாளும் பித்தமிக ஏறி அலைவாராம்!



இந்நிலையில் ஆயினன் இன்பவல்லி காதலனும்;
தன்னிலையை மற்றவன் தாழ்வாகப் பேசியதால்—
சூடு பிறந்ததும், சூறைப் பெருங்காற்றால்
ஆடும் மரம்போல ஆசை அலைக்கழிக்க,
வெற்றி பெறுமட்டும் வேறெதையுங் காணாமல்
உற்ற மனையாளின் உண்மையன்புந் தான்துறந்து,

பூந்தோட்டம் ! புதுப்பொலிவு ! பொன் ! மணி !
எல்லாம் இருந்தது அவன்மட்டும் அங்கில்லை,
இவளிங்கு ஏங்குகிறாள் பழமை தனைஎண்ணி
அவன்அங்கு அலைகின்றான்பொருள் குவித்து !
இவளைச் சுற்றிலும் ஓர்பாலை, வெப்பம் மிகுதி
அவனைச்சுற்றிலும் பெருஞ்செல்வம், பெருகு செல்வம்
ஓயாமல் உழைக்கின்றான் வேறு நினைப்பற்று
போர் போராய்க் குவிந்திடுது பணமூட்டை
கண்டதால் வெறி மேலும் கொண்டிட்டான்
காளையவன் பணந்தேடும் பாடதிலே மாள்கின்றான் !
கைம்பெண்ணாகிவிட்டாள் கருப்புடை யணிந்தாள்
காதல் உலகினில் வாழ்ந்துவந்த எம்மைக்
காசு தேடிடும்வெறி பாழாக்கிற் றந்தோ !
இல்லறத்தில் எளிமையுடன் இருந்து வந்தேன்.
என்னை மறந்தும் அவர்பொருள் பித்துக்கொண்டு
ஓயாதுழைத்து ஒருதுளியும் பயன்பெறாது
உயிர்நீத்தாரே அந்தோ ! உலகை அறிந்திடுவாய்
பணத்தாலே சுவையில்லை பாழாக்குது வாழ்வை

பூந்தோட்டம், மாடு,மனை, பொன்,மணிகள், புத்தாடை
நீந்தியெழும் செல்வ நிலைக்களனாய் ஆள்அம்பும்—
எங்கும் பளபளப்பும், ஏற்ற மிகுவாழ்வும்,
தங்கியிவை தான்துய்க்கத் தக்கதாய் ஓய்வில்லை!
பின்னும் பொருள்குவிக்கப் பித்தாய் அலைகின்றான்!
பொன்னாள் தனியாய்ப் பொசுங்குகிறாள் வெம்மையினால்
ஓடுகின்றான்; போர் போராய் ஓங்கியெழும் செல்வத்தைத்
தேடுகின்றான்; அவ்வழியில் தேய்ந்து மடிந்தானே!!

காதலித்து வாழவந்தாள் கைம்பெண்ணாய் மாறியே
தீதளிக்கும் செல்வத் திரளையே மேல்சுமந்து,
"விந்தை மிகுபணமே, வீணாய் உனைத்தேட
அந்தோ! என் அன்பர் அரியஉயிர் நீத்தாரே!"
விம்மினாள்; எண்ணியே நெய்துயிர்த்தாள்; பாழானாள்!
அம்மவோ; ஆரணங்கு கைம்மைக் கருப்புடையில்!

எத்தனை இன்பமுடன் இருந்துவந்தோம் முன்னம்
செல்வத்தைத் தேடாமல் செந்தேன் உண்டு மகிழ்ந்தோம்
பணம்தேடும் ஆவலது பாம்பாகியும் வந்து
பண்பாளன் என்கணவன் உயிர்குடித்திட்டதந்தோ !
பொருளிருக்குது எனக்காக மலைபோல—
புன்னகைதான் இல்லை ! புருடனவன் இல்லை !
மாளிகை இங்குளது மயக்கு பொருளுடனே
மன்னவன் இங்கில்லை; எனக்காவி இல்லை !
இந்த விதமெல்லாம் எண்ணமிட்ட பெண்ணாள்
பாடிக் காட்டிடவில்லை அவள் மனத்தின் நிலையை !
பார்வை ! பெருமூச்சு ! திகைப்பு இதனாலே
பார்ப்போர்க்கு உணர்த்திவிட்டாள் இப்பாடந்தனையே !
எங்கேனும் நெடுந்தொலைவு சென்றிடவே வேண்டும்
ஏகாந்த நிலை பெற்று இருந்திடவும் வேண்டும்
இங்கிருந்து முன்னாளை எண்ணியெண்ணி விம்மி
இருந்திடுதல் இறத்தலினுங்கொடிதாகும் அம்மா !
இந்தவிதம் எண்ணி அவள் புறப்பட்டாள்காண்
'வானரதம்' ஏறி நெடுந்தொலைவு செல்ல—

கண்ணாளன் இன்னுயிரைக் கவ்வுங் கடும்பாம்பாம்
மண்ணாகும் செல்வத்தை வைதாள், சபித்திட்டாள்;
கொட்டிக் கிடக்கின்ற கோடுயர்ந்த மாமலைபோல்
கிட்டியுள்ள செல்வத்தால், கெட்டுவிட்ட இல்வாழ்வும்
மன்னவனும் மீண்டும் வரவகையும் இல்லையன்றோ ?
என்னே, என் ஆவலெலாம் ஏகியதே; ஆவியில்லாக்
கூடாகி ஏன்நான் இக்கோடிபொருள் தானடைந்தேன்
வாடா மணவாழ்வு வாய்ப்பதற்கு யாது செய்வேன் ?

என்பதெல்லாம் வாய்விட் டியம்பவில்லை; நெஞ்சத்துத்
துன்பமெல்லாம் ஒண்முகத்தில் தோய உணர்த்திட்டாள்
இங்கே இனிமேலும் தங்கினால் முன்நினைவால்
சங்கடங்கள் மேவிவரும்; சாவே சிறப்பென்னும்
எண்ணம் மிகும்; எனவே ஏக்கம் மறைப்பதற்கு—
விண்ணூர்தி ஏறி வெளியூர் புறப்பட்டாள்;

அங்கு குறுக்கிட்டது மற்றோர் அரவு
அழகுளது! ஓர் வாலிபன் உருவினது!
அன்னவனோ செல்வத்தில் புரள்பவன்! சீமான்!
விநாடிக்கு விநாடி அவன் வேலை செய்கின்றான்
விண்ணிலே பறக்கையிலும் வேலை செய்கின்றான்
விழியாலே அவன் நுழைந்தான் பெண்மனத்தில் அன்றே
அவனை மணக்கின்றாள் ஆரணங்கு மகிழ்ந்து
பொருள்தேடி அலைந்திடத் தேவையில்லை அதனாலே
பொங்கிடும் காதலுடன் வாழ்ந்திடுவான் என்று
நம்பிக்கொண்டாள் அந்த நங்கை; அய்யோ, பாவம்!
ஆடலிலும் பாடலிலும் விழாதனிலும் மிகவும்
ஆவலுடனே அன்னவன் ஈடுபடுகின்றான்.
பூங்காவில் உலவுகிறார் புதுக்கீதம் பாடி
காண்போர்கள் வியந்திடவே கவர்ச்சிகரமாக !
அவள் அணியும் ஆடைகள் அலாதி அழகு!
ஆபரணம் புதுவிதம், அலங்காரமுங்கூட
விருந்துகளில் அவள்! பலர் விழிக்கு விருந்தாக—
சிறந்ததொரு வாழ்வு சிங்காரமாக.

வானிற் பறக்கையிலும் வற்றாச் சுறுசுறுப்பாய்த்
தேனின் இனியாளின் சிந்தை கவர்ந்திட்டான்
சீமான் மகனொருவன்; செல்வத்தின் மேற்புரண்டும்
சாமான்ய மாகச் சகியின் மனம்புகுந்தான்!

மீண்டும் புதுவாழ்வு மேவியது மங்கைக்கு!
தூண்டிடும் அன்பால் துவங்கினாள் இல்லறத்தை!
சொத்து மிகவுண்டு; சுகந்தானே தேவையெனச்-
சத்தான காதலிலே சார்ந்திருக்க முந்தினாள்.

ஆடலும், பாடலும், ஆரவா ரத்தோடு
கூடலும், கும்மாளம் போடலும், கோலமுடன்
ஒப்பனை செய்தே உலகம் பின்பற்றச்
செப்பனிட்டாள் வாழ்வைத் திருப்திதான் பெற்றாளோ?



ஆயின் அத்தனையும் அவ்விருவர்க்காகத் தானா?
அல்ல! அவனியோர் கண்டிடும் படத்திற்காக?
ஆடை அணிமுறைகள் தமை அறிவிக்க
வாணிபம் பெருக்கிட—விளம்பரம் தனுக்கே!
அலுத்துக்கொண்டாள் சலித்துப் போனாள் அழகுமிக்காள்
ஆடம்பரச் சூழலில் மன அமைதிதான் ஏது?
ஏதுக்குப் பொருள்தேடி அலையும் இவ்வாழ்வு?
இருப்பதுடன் வசித்திடுவோம் சிற்றூரும் சென்று
கொஞ்சுமொழிக் குமரி கூறிடவே அவனும்
கோலாகல மிக்க வணிக உலகு விட்டுப்
பச்சைப் பசேலெனும் பாங்குள்ள இடத்தில்
மாடு கன்றுகளுடன் விவசாயம் மேற்கொண்டான்
அங்கு, வயலிலே சிறந்தது என்வயலே எனவும்
விளைச்சல் மிகுவது என்னுடையதே எனவும்
பசுவில் உயர்ந்தது என்னிடமே எனவும்
பாங்குபெற முனைந்தாலும் வெற்றியே கண்டான்
சிறிதளவு நிம்மதியும் பெற்றிட்டாள் மாது!

அல்லவே! எல்லாம் அவட்காகவே அன்று!
நல்ல விளம்பரத்தால் நானிலம் கொண்டாட!

சூழல் அலுத்தது, சுற்றிச் சலித்திட்டாள்!
''வாழ விரும்பிஞல் வாணிபத்தைக் கைவிட்டுக்
கொஞ்சுமெழில் கூடிக் குலவும் இயற்கையுடன்
தஞ்சம் அடைந்திடுவோம் சாந்தம் நிலவு''மென்ருள்.

சம்மதித்தான்; வேளாண்மை சார்புள்ள மாடு கன்று;
நிம்மதிதான்! ஓரளவு நீள நிலைத்ததோ?



இந்தவித வாழ்வதுவும் நிலைத்திட விலையே
ஏமாந்த நேரத்தில்—கொழுத்த பசு ஒன்று
கொம்பாலே குத்தி அவனைத் தூக்கிப் போட்டதாலே
வீழ்ந்தான், இறந்திட்டான் இதயம் அளித்தவனும்
மீண்டும் கண்ணீர்! மீண்டும் கருப்புடை !
மீண்டும் கைம்பெண் ! மீண்டும் பெருநிதி !
வழக்கறிஞர் வாழ்விழந்த அவளுக்கு
மறைந்தவன் விடுத்துச் சென்ற மாநிதிஅளித்திட்டார்
பொருள்மேல் பொருளாய் வந்து சேருது —
பொன்னவிர் மேனியாள் மனமோ வேகுது.
பொருள்தேடி அலைந்தலைந்து வாழ்விழந்தாரே
பொருளே! எனக்கென்ன உன்னாலே பயனே!
விம்முகிருள் பெண்ணவளும் செல்வச் சுமைதாங்கி
விழிஅழித்துப் பொன்னாலே திரைதேடிடல் போல்
வாழ்வழித்துப் பணம் என்னை வந்தடையுதந்தோ !
போயொளிவேன் எங்கேனும் பிறர்காணு வண்ணம்
எனைஅறிந்தார் கண்டால் என்ன பேசுவரோ !

எம்பசுவுக் கீடில்லை என்றே மகிழ்ந்தவனைக்
கொம்பினுல் குத்திக் கொலையில் முடித்திடவே
அய்யகோ! மீண்டும் அருவியாய்க் கண்ணீரைப்



பெய்தனளே; யாதொன்றும் செய்வ தறியாளே!
கைம்மைநிலை யுற்றுளைக் கண்டு, வழக்கறிஞர்
கைம்முதல் கோடி கணவன் விடுத்ததெனத்
தந்து திரும்பினர்; சிந்தைமிக நொந்தனளே!

வந்துவந்து வெள்ளமாய் வற்றுமல் சேர்கின்ற
செல்வத்தால் யாது பயன்? சீரழிந்து போனபின்னே.
நல்வழியில் வந்ததன்றே நாதர் இருவரையும்
வாரிக் கொடுத்திட்டு வாழ்வை இழந்திட்டேன்
கூரிய கண்ணை விற்றுக் கோடிபொன் வாங்கியென்ன

"போகின்றாள் பார் இவட்கு இலட்சம் பல இலட்சம்
செல்வத்திலே புரண்டிட வல்ல சீமாட்டி
அவ்வளவும் கணவன்மார் தந்திட்ட தய்யா
அவளைத் தொட்டவர்கள் பிணமாவர் மெய்யாய்!
எவ்வளவு செல்வம் இருந்தென்ன இவளுக்கு
இல்லற இன்பமதோ நீடிப்பதில்லை
கொண்டவனை உருட்டிவிடும் கொடிய வளிவளைக்
குவலயம் சுமந்திடுதல் குற்றம், பெருங்குற்றம்."
இவ்விதமும் இன்னும் பலவிதமும்—
பேசிடுவர் ஏசிடுவர் பற்பலரும் என்றெண்ணி
நாடுதனைக் கடந்து செல்கின்றாள் பாரீஸ்,
நளினிகளும் நாயகரும் நடமாடும் நகரம்—
ஆங்கவளும் காணுகின்றாள் ஓவியன் ஒருவனையே!
ஓவியம் தன்னால் ஊதியம் கிடைக்காதென்பதனால்
மோடார் ஓட்டுகின்றான் வாடகைக்கு—ஊர்சுற்றுவோர்க்கு
முரட்டுக் குணம், ஆனால் உள்ளம் வெள்ளை;
எப்படியோ அவனை ஒப்புக்கொள்கின்றாள்
எளிய வாழ்க்கையிலே ஈடுபடுகின்றாள்

"கெட்டவளே, கீழ்மகளே! காதற் கிழத்தியெனத்
தொட்டார் பிணமாவர்! துன்பச் சுரங்கமிவள்!"
என்று பலவாறாய் ஏசுமன்றோ இவ்வுலகம்?
அன்றவள் நெஞ்சுபடும் அல்லல் அறியாதே!

நாடுவிட்டு நாடுசென்று நலிந்த உளந்தேற
நாடுகின்றாள் பாரிசெனும் நாகரிகப் பேரூர்!



ஓவியந் தீட்டி, வரும் ஊதியம் போதாமல்
ஆவிவண்டி ஓட்டி அதனைச் சரிக்கட்டும்
கள்ளமிலா வெள்ளைமனப் பிள்ளை ஒருவனது
உள்ளம் பிடித்ததால் ஒப்பிவிட்டாள் வாழவே!

செல்வமில்லை ஆகச் சிறப்பான ஏழ்மையிலே
நல்விதமாய் இல்லம் நடத்தி மகிழ்ந்தனளே!

அவனில்லா வேளைதன்னில் ஆளனிடம் ஓர் குரங்கு
வண்ணம் குழைத்து ஓவியம் வரைகிறது ஆங்கு
இவனும் வரைகின்றான் அதனையுந் திருத்தி
இன்னார் இவர் என்று எவரும் அறியா நிலையில்
ஓர்நாள் அவன் ஓவியம் ஒன்று
புதுமை கலந்தது புரட்சி மிக்கது என்று
பொருள் அதிகம் கொடுத்தொரு ரசிகன்
வாங்கி விடுகின்றான் வருகிறது விபத்து!
'ஓவியக் கலைதனிலே ஒப்புயர் வற்றவன் காண்!
காவியம் தெரிகிறது இவன் காட்டும் திரைதன்னில்
என்றெல்லாம் புகழ்கின்றார் பொருளும் குவிகிறது!
'இசையைத் திரையினிலே காட்டிடுவேன்
ஒலியும் ஓவியமாய்த் தெரிந்திடவே நான் செய்வேன்'
என்றுரைத்துக் கருவிகளை அமைத்துமே ஓவியனும்
ஏதேதோ தீட்டுகின்றான்; எல்லாமே அற்புதம்
ஆகுதுகாண்!
எங்கெங்கோ விழாக்கள்! எங்கும் அவன் பவனி!
எளிமை வாழ்வளித்த இனிமை மாய்கிறது
ஏந்திழையாள் இழந்திட்டாள் இல்லற வாழ்வதனை!

தோழன் குரங்கொன்று தூரிகையால் தீட்டுவதை
ஆளன் திருத்தி அழகாய் மெருகூட்டி
விற்பனை செய்வான் விலையும் அதிகமில்லை !
அற்புதமாய் ஓர்நாள் அதிகப் பொருள்தந்தே
ஒப்பற்ற ஓவியம் என்றே உயர்த்திவிட---
அப்பொழுதே ஆபத்தும் ஆரம்பம் ஆகியதாம் !

கோடுகளே காவியமாய்க்—கொட்டியதே ஓவியமாய்
நாடு புகழ்ந்தது; நாடிவந்து செல்வம்
குவிந்தது ! கோல மயிலனையாள் கொள்கை
அவிந்தது ! மாய்ந்தது அவள்வேண்டும் ஏழ்மை !

விழாஎடுத்தார்; ஓவியனும் வெற்றி உலாவந்தான்;
அழாக் குறையாய்ப் பெண்ணழகி அங்கே குமைந்திட்டாள்
தேவை மிகுதியினால் தேர்ந்த பொறியமைத்தான்
ஓவியங்கள் ஏராளம் உற்பத்தி செய்து விற்றான்!

இந்தவிதம் விந்தைமிகு கலையினிலே ஈடுபட்டுக்
கருவிகளை அமைத்தவனும் கலையினைப் பெருக்கி வர—
கருவிகளுக்கிடையே சிக்கியே ஓர்நாள்
செத்துவிட்டான் ஓவியனும்; செல்வி விதவையானாள்!
ஓவியன் திரட்டிவைத்த பெருநிதியும்
ஒயிலிழந்து ஒடிந்த மனமுடைந்த பெண்ணுக்கே!
கருப்புடையில் அவளைக் கண்ட கல்மனமும் உருகும்
களிப்பான வாழ்வுதேடி அலைந்தவளின் கதியைக் காணீர்

சின்னாட்களுக்குப் பிறகு சித்தச் சோர்வுடனே
சிற்றுண்டிக் கடையொன்றில் சென்றவள் இருக்கையிலே
கோமாளி கூத்தாடிக் குபீர் சிரிப்பெழுப்பி
ஆங்கொருவன் ஆடியுமே அகமகிழ வைத்திட்டான்.
ஊதியம் அதிகமில்லை; உயர்ந்த நிலையுமில்லை
எப்படியோ சிரிப்புமூட்டி வாழவழி கண்டிட்டான்
இவனுடனே வாழ்ந்திட்டால் இடர் ஏதும் ஏற்படாது
என்றெண்ணி அன்னவளும் அவனை மணந்தாளே!

கண்டு பிடித்த கருவியே காலனாய்
உண்டதே ஆவி; உடன்விதவை ஆயினளே!
ஓவியன் ஈட்டிவைத்த ஒப்பரிய பொற்காசும்
பாவியவள் மாநிதியின் பண்டாரஞ் சேர்ந்தனவே!
கல்நெஞ் சுருகும் கறுப்புடையிற் கண்டவர்க்கே;
உள்நெகிழும் உல்லாச வல்லி உயிர்வாதை!

சோர்ந்தடங்குஞ் சித்தத்தின் தொய்வு நிறைவதற்குள்
தீர்ந்தது சின்னாளே! சீமாட்டி ஓர்தினத்தில்
சிற்றுண்டி மாளிகை சென்றாள் அமர்ந்திருந்தாள்.
உற்றவர் உள்ளம் உவகைக் களிகொள்ள
ஆடினான் கோமாளி ஆங்கொருவன்; எக்களிப்பால்
பாடினான்; யாவரும் பல்தெரியத் தாம் சிரித்தார்!
"ஏழையாய் உள்ளான்; எனக்கும் நகைப்பூட்டி
வாழவழி காட்டுவான் வாராது துன்பமெனக்
கண்மணி நான்காம் கணவனாய்க் கல்யாணம்
பண்ணினாள், நல்ல பயனடைவோம் என்றெண்ணி!

சிற்றுண்டிக் கடையினிலே வருவோர்கள்
மனமகிழ வேடமிட்டுப் பலவேடிக்கைதான் காட்டி
கிடைத்ததைக் கொண்டவனும் கிள்ளை ஆவலுடனே
தொல்லை தாக்காத வாழ்வினைப் பெற்றிருந்தாள்.

படமெடுக்கும் கூட்டத்தார் கண்களிலே பட்டுவிட்டான்
பட்டம் ஏதும் பெறாது பகட்டு துளியும் இராது
கோமாளி ஆட்டமதைக் கும்பிக்காகக் கொண்ட
நடிகனவன் ! நாடி அவள் பெற்றிட்ட நாயகன்
அவ்வளவே! அந்தரத்தினிலே அவனை ஏற்றி வைத்திட்ட
அவன் நடிப்பு! அவன் அழகு! அவனிமெச்ச உயர்ந்தது
கால
அரண்மனையோ என்றெவரும் வியந்திடும் வீடுபெற்று
அடிவருடப் பல்லோர்கள், ஆடம்பரம் அமோகம்!

அவளிருக்கும் நிலையினையும் அவன்காண நேரமில்லை
ஓயாமல் படப்பிடிப்பு! ஒய்யார மிகுவாழ்வு
சிரித்துப் பேசிடவோ நேரமில்லை அவனுக்குச்
சேல்விழியாள் கண்டுகொண்டாள் செந்தேள் வந்தென

வேடம் பலபூண்டு வேடிக்கை காட்டிடுவான்,
ஆடம் பரமில்லை, ஆர்ப்பரிப்பு தானுமில்லை,
தொல்லையில்லை; தூயோன்; துளியும் பணத்தாசை
இல்லையில்லை; என்றும் எளைப்பிரியான்; போதுமே!
கிட்டிவந்த சொற்பத்தில் கிள்ளை மகிழ்வுடனே
எட்டிவிட்டோம் இன்பத்தின் எல்லை எனஇருந்தாள்.
பேரிடி தாக்கியது பேதைப் பசுமரத்தில்!
ஆரிடம் கூவி அரற்றுவாள் இந்நிலையை?
குட்பி கழுவமட்டும் கோமாளி வேடத்தை
நம்பியிருந்த அவள் நாயகனைச் சூழ்ந்துகொண்டார்.
"என்னே உனதழகுக் கெங்கள் திரைப்படத்தில்
முன்னேற்றங் காண முயல்வோம்; விரைவாக
உச்சிக்குச் செல்வாய்; உயர்வாய்!" எனக்கூறி
மெச்சினர். இச்சையுற்றான் மேல்நிலைக்கும் சென்றிட்டான்.
மன்னன் அரண்மனைபோல் மாளிகை, வாகனம்,
பின்னே அடிவருடப், பேச்சைச் செயலாக்கப்
பல்லோர் நிறைந்திட்டார்! பம்பரமாய்ச் சுற்றியே
அல்லும் பகலும் அயராப் படப்பிடிப்பாம்!

ஓர்நாள் அவனுடைய உயர்திறத்தைப்
பாராட்டக் கூடிவிட்ட பல்லாயிரவர்
ஓடோடி அவனைச் சூழ்ந்து கொண்டதாலே
அவர் நடுவே சிக்கி அவன் மிதியுண்டு மாண்டான்!
மீண்டும் வந்தது அந்தக் கருப்புடை—
மேலும் சேர்ந்தது அவட்குப் பெருநிதி—
'இத்தனை தொல்லையைத் தந்திட்ட பணமே
இனி உன்னை நான்சேர்த்து வைத்திடவோ கூடாது
சேச்சே ! நீ வேண்டாம்! சென்றுவிடு உடனே'
எனச் செப்பாமற் செப்பி ஓர் திட்டம் வகுத்தாள்
"அத்தனை பணத்தையும் அளித்திட வந்தேன்
அரசாங்கம் இதனை அருள்கூர்ந்து ஏற்று
அல்லல்தனைத் துடைத்து ஆதரிக்க !" என்றாள்.
இதனைக் கேட்டவுடன் மயக்கம் அதிகாரிக்கு.
இவளுக்குச் சித்தம் குழம்பிற்று என்று
மருத்துவ நிபுணரிடம் அழைத்துமே சென்றார்
அவரிடம் கதை தன்னை அன்னவளும் கூற—
மயங்கிக்கீழே அவரும் வீழ்ந்துவிட்டார், அந்தோ!

ஒய்யாரம், உல்லாசம், உற்சாகம் உண்டெனினும்—
அய்யோ தன் அன்பிற் கரசியிடம் இன்பமாய்
வாய்ச்சொல்லும் பேச வகையில்லை; நேரமில்லை!
காய்ச்சிய நெய்யாகக் கண்ணாள் உருகுகின்றாள் !
பண்பட்ட வீரனைப் பாராட்டிப் போற்றிட
நண்பர்கள் கூட்டம் நடத்திய ஓர்விழாவில்—
பல்லாயிரம் பேர்கள் பார்த்த நெருக்கடியில்
கொல்லாமல் செத்தான்; குவளைக்கண் மோதியழ!
மீண்டும் கருப்புடையும், மீண்டுமந்தக் கண்ணீரும்!
மாண்டவன் செல்வம் வேண்டாது வந்ததால்
திட்டமொன்று தீட்டித்—திரளான தன்சொத்தைக்
கெட்டழிந்து போனவரின் கீழ்மை அகற்றுதற்கே
எண்ணி அரசாங்கம் ஏற்ற அலுவலர்பால்
நண்ணி அவள் திட்டம் நவின்றதுதான் தாமதம்...
அன்றவரும் அஞ்சி "அழைத்துச்செல் வைத்தியர்பால்!
சென்றிவளின் சித்தம் திடுமென்று பேதலித்த
செய்திசொல் !" என்றார்; சீமாட்டி அங்ஙனமே
எய்தி, மருத்துவர்க்கு யாவும் விரித்துரைத்தாள் ?

பணியாள் ஒருவன் வந்திட்டான் இங்கு
பழைய ஆள் அவன்! பரிகாசம் செய்யப்
படமெடுக்க வந்தானே—அவனேதான்?
நிலைதாழ்ந்து வேலையாளானான் அவனும்.

அவனே இனி நமக்கு வாழ்வளிக்க வல்லான்
வாழ்ந்து கெட்டுவிட்டான் வலிவிழந்து விட்டான்
வாரிச் செல்வமதைக் குவித்திடவே மாட்டான்
வாழ்வு எளிமையுடன் இனிமை காண்போம் என்று
அவனைத்தன் கணவனாய் ஆக்கிக் கொண்டாள் மாது

இனிமையாய்ச் சென்றது சில ஆண்டு தாமும்
மக்கள் மூவர் பெற்று மகிழ்ந்திருந்தாள்.
மாளிகை வாசமில்லை! மகிழ்ச்சிக்குப் பஞ்சமில்லை.



கேட்ட நிபுணருமே கீழே மயங்கிவிழப்—
பாட்டாளி ஆடையிற் பண்டைய ஆள்வந்தான்!
உந்துவண்டி ஏற்றிமுன் ஊர்சுற்றி வந்தானே—
முந்திப் படமெடுக்க முன்வந்து தோற்ருனே—
அன்னேன் வளங்குன்றி ஆளாய்ப் பணிபுரிந்தான்!
"முன்னளில் நம்மை முதன்முதலாய்க் காதலித்தோன்
வாழ்வு நலம்கெட்டு வறுமையில் வாடுகின்ருன்,
வாழ்வளிக்க வல்லான் வளரா எளிமையினுல்
என்றுந் துணையிருப்பான், இன்பந் தனிமையுடன்
குன்ருதென் றெண்ணிக் குறித்தாள் கணவனுக!

ஆண்டுகள் சிற்சில ஆயின மேன்மையாக!
தீண்டுங்கால் மெய்க்கின்பஞ் சேர்க்கும் மழலைகள்
மூன்று பிறந்தன; மோகம் குறையவில்லை!
ஈன்றவள் நெஞ்சறிந்தே ஏழை உழவனுய்
ஏர்முனையிற் பாடுபட்டான், ஏற்றமுடன் வாழ்ந்தானே

ஓர்நாள் அவன் வீட்டோர வயலில்
இயந்திரக் கலப்பை கொண்டு உழுதிட்டபோது
பீறிட்டுக் கிளம்பிற்று எண்ணெய் ஆறாக!
எண்ணெய்! எண்ணெய் என்று எக்களிப்புடனே
துள்ளிக் குதித்தவனாய் கூவிடவே
மாது, வந்தது புதிய ஆபத்து என்று
திடுக்கிட்டுப் போனாள் விழியில் நீர்சோர
எண்ணெய் கிடைத்திடுது நம்வயலில்
எண்ணெய் தங்கமதைத் திரட்டியே தருமே
செல்வம் மிகுந்திடுமே மனைமாட்சி அறுமே
மீண்டும் கருப்புடையோ! கண்ணீரோ என்று
மாதவளும் பல எண்ணி மருண்டு கிடந்திட்டாள்

ஓர்நாள் உழுகையிலே நற்கழனி உள்ளிருந்து
பீறிட்டு மேற்கிளம்பிப் பேரருவி போற்பாய்ந்தே
ஆறுய்ப் பெருகியதே அத்தனையும் மண்ணெண்ணெய்

துள்ளிக் குதித்தான் துணைவனவன் கள்வெறிபோல்!
உள்ளந் துணுக்குற்ருள் : 'உற்றதே தீமையினி—
ஏராளத் தங்கமும் எண்ணெய் வயல் மூலம்
சேரத் துவங்கிடுமே! தீர்ந்திடுமே இல்வாழ்க்கை!
எம்மவர் சாவாரோ ? ஏனிந்தச் செல்வநிலை!
அம்மவோ, மீண்டும் அகலாக் கருப்புடையோ?'
என்று புலம்பி இதயங் குமுறுகையில்......



அண்டை வயலிருப்போர் அக்கணமே வந்து
அறியாது எமது எண்ணெய்க் குழாயினையே
பழுதாக்கிப் போட்டாயே! பார் எண்ணெய் வெள்ளம்
எனப் பதறிக்கூறினர், பாவை மனமகிழ்ந்தாளே!

எண்ணெய் நமதல்ல! செல்வம் குவிந்து பெருகாது

ஆகவே ஆபத்து நமக்கில்லை அதனால்
இல்லற வாழ்வுக்கு இடையூறு இல்லை
இனிதாக வாழ்ந்திடலாம் ஏற்றவருடனே
என்றெண்ணிப் பூரித்தாள் ஏந்திழையாள்
பலதோல்விக்குப் பிறகு வாழ்வில்
இன்பம் பெற்றிட்டாள்—



"அன்று நீ ஏர்முனையில் ஆழத் துளைத்தது
நீளப் புதைத்த எம் நெய்செல் குழாயாகும்!
பாழாக்கிப்போட்டனையேபாவி"யென அண்டையுளார்
கூவியது கேட்டாள், குதூகலித்தாள் கோவையிதழ்ப்
பாவை தவித்தாள் பதற்றமும். "தேவையில்லா

ஆபத்துச் சூழ்ந்ததெனை அஞ்சினேன், அம்மம்மா!
பாபத்தைத் தூண்டிவிடும் பண்பற்ற செல்வமே!

இல்லறத்தால் ஏற்படும் ஈடற்ற இன்பத்தைக்
கொல்ல வரும் நச்சரவே! கோடி கொடுத்தாலும்
எத்தனையோ தோல்வி இடையூறு நேர்ந்தபின்னர்க்
கொத்து மலராய்க் குவிந்திட்ட பேரின்பம்
வாய்த்திடுமோ?" என்றாள்-மனமகிழ வாழ்ந்திட்டாள்!

பணம்படுத்தும் பாடுதனை உணர்ந்திடவும்
பணம்தேடும் அரிப்பினுல் ஏற்பட்டு விடும்
பாழ்நிலையை, விபத்தை விளக்கிடவே
படம் மெத்தத் தரமாகப் பலன் அளித்திடவே—

பார்த்ததில் சிரித்து மகிழ்ந்ததுடன்
சிந்தைக்கு விருந்து பெற
வழி இருந்திடக் கண்டு
மகிழ்ந்திருந்தேன் நானே!



பார்த்துவந்த பின்புநான் பாடம் மறக்கவில்லை!
"செல்வத்தைத் தேடித் திரிவதால், ஓடுவதால்,
பல்விபத்தும், பாழும், பயனில்லா வாழ்வுமே
சித்திக்கும்; என்று சிரிப்பூட்டும் நற்படத்தில்
தித்திக்கும் நன்மருந்து சிந்தனைக்கும் தந்தாரே!

ஆளுநம் திறனென்ன அற்புதமாய் என்றெண்ணி
நாளும் மகிழ்ந்திருந்தேன் நன்று!

